அல்லா துணை.

# மதுக்குமதுக்குராஜன் கதை.

இஃது,

பேட்டை ஆமூரிலிருக்கும்

வாவலு பாவசாயபு

அவர்கள் குமாரராகிய

அப்துல்காதிர்சாயபு

அவர்களாலியற்றியது.

இதனை

ஆர்க்காடுதாலூக்காதிருவத்தூர்

சாத்தானி பேட்டையி லிருக்கும்

மகாகனம்பொருந்திய

முகம்மதுமஸ்தான்சாயபு

அவர்களால்

திருவொற்றியூர்

இருசப்பமுதலியார்குமாரர்

பரசுராமமுதலியாரது

பரப்பிரமமுத்திராக்ஷரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

௧௮௮௦-ஞு-எப்ரல்மீ.

பிசுமில்லா ஹிர்றகுமா னிர்றகீம். 2

# மலுக்குமுலுக்குராஜன் கதை.

காப்பு—வெண்பா.

வீரன்மலுக்கு முலுக்கின்வரலாற்றை
பாரில்தமிழ்மொழியாற் பகரவே—பேருலகில்
எண்ணமுடியாப்படைப்பு மெல்லாவற்றையும்படைத்துக்
கண்ணின்றிக்காண்பவனே காப்பு.

விருத்தம்.

விண்ணகந்தலங்கயாவும் விளங்கிடச்செய்தோனேயே
மண்ணிடம்பலதுந்தோன்ற வகுத்தவல்லவனுமோனே
எண்ணிலாதவிதங்கள்செய்த விறையவனுமோனேயே
கண்ணினிற்காணுந்தூய கர்த்தனைக்கருத்துள்வைத்தேன்.

நெட்டெட்டாயவளர்ந்த நீள்முடிமலுக்குராஜன்

வெட்டுப்பட்டிறந்தவாறை விளம்பிடப்புவியின்மீதில்
வட்டவான்மதியையொத்த முகம்மதுநபியுல்லாபூ
தொட்டிடாப்பாதந்தன்னைச் சிந்தையுள்ளிருத்தினேனே.

பாதகமலுக்குராஜன் படைத்தொழிலதனைக்கூற
பூதலந்தான்விளங்கப் பெரியவன்றூதராக
ஆதரங்கபிமுதலா யகம்மதுநபிமார்மட்டும்
மாதவநபிமார்பாத மனந்தனிலிருத்தினேனே.

மணிமுடிமலுக்குராஜன் வரலாறுதன்னையிந்தப்
பணிக்கைமைகொண்டபாரில் படிபடியாகச்சொல்ல
துணிவுளவெஞ்சாறேர் திருக்கோர்துணையாய்நின்ற
அணியபூபக்கர்பாத மகத்தினுளிருத்தினேனே.

மலையெனவுடல்வளர்த்த மலுக்கினின்வரலாறுதன்னை
அலைகடல்புவியிலோத ஆதவனொளிக்கச்செய்த
தலைமையுமருவிப்பெற்ற தவத்தினருமர்கத்தாபின்
நிலைமலர்பதத்தைமெய்ம்ம னெஞ்சினுள்ளிருத்தினேனே.

நிலமிசைசீர்த்திபொங்க நால்வகைப்படைகள்சூழ
வலியபலமொழிந்திறந்த மலுக்கினின்வரலாறோத
பலகைகண்மட்டுதிர்ச்சோர்ந்த பாத்திபருதுமானார்தன்
மலர்வடிபதந்தன்னைமெய்ம்மனதினுள்ளிருத்தினேனே.

நெடுமுடிமலுக்குராஜ னீண்டநாள்புவியையாண்டு
பொடிபடமடிந்தவாறைப் புவிதனில்விளங்கவோத
படியிடமதிரவெட்டும் பாத்திபாவியார்தன்
கடிமலர்ப்பதத்தையென்றன் கல்பினுள்ளிருத்தினேனே.

மலிபலமலுக்குராசன் வரலாறுதன்னைப்பாட
அலிமகனசனுசைன்றன் னழகியபாதம்போற்றி
ஒலிசருக்காசரான வுயாப்துல்காதிர்பாதம்
தலைமிசையிருத்திவாழ்த்திச் சாற்றினேனல்லோர்முன்பில்.

இந்நூல் செய்தவன்பெயர்.

தேன்கவிபழுத்துச்சிந்துஞ் செழுநகராம்பூர்வாழும்
பான்மொழிவாலைபவா சாயபுபுதல்வரானோர்
தீன்முலறுதவரு அப்துல் காதிருவென்னும்பேரார்
சீன்முதலாவிளங்கச் செப்பினேனிந்நூல்தன்னை.



## நபிசல்லல்லாகு அலைகிவசல்லமவர்கள்

அரசசெலுத்தினதைச்சொல்லுதல்.



### அலங்காரக்கண்ணி.

முத்தொளிவாகவிலங்கியிருந்த முகம்மதுநபியுல்லா
கத்தனாசினிலேறியேபேசிய கபீபுநபியுல்லா
அட்டதிசையின்குபாரைப்பறித்த அகம்மதுநபியுல்லா
கட்டிலடங்கிடாக்காரணங்காட்டிய கபீபுநபியுல்லா
மேகந்தலைமேல்குடையிடவந்த வேதநபியுல்லா
காதவழிக்குவாடையும்வீசிடும் கபீபுநபியுல்லா
பாதம்புவிமேல்தட்டாநடக்கும் பயம்பர்நபியுல்லா
சோதிவடிவதாய்த்துலங்கிடவந்த சொரூபநபியுல்லா
நபிமார்க்கெல்லாம்நாயகமான நாயனபியுல்லா
அவனியையொருகுடையாகிடவாண்ட அரசர்நபியுல்லா
பொல்லார்முடிகளைப்பொடிபடச்செய்த பெரியநபியுல்லா
எல்லார்தமக்குமிதாயத்தீய்ந்த இறசூல்நபியுல்லா
மானும்புலியுமொருதுறைநீரை மகிழ்ந்துதான்குடிக்க
கிளியும்பருந்துமொருகூண்டிருந்து கூடிவிளையாட
குதிரைத்தலைவரும்யானைத்தலைவருங் கூடியருகிருக்க
நாலுயார்களருகிருந்து நல்லமொழிகேட்க

அஸ்வராடமூரார்களெல்லாஞ்சுற்றி யருகிற்றாணிருக்க
வணங்காராஜர்களெல்லாம்வந்து வரிசைச்செமாலோத
கெட்டகட்டப்புகளெல்லாம்நீக்கி கேள்வியாறுநடக்க
இந்தவிதமாகபியுல்லாவு மிருந்தார்மக்கமதில்
வந்துவாசவராடிகளைச்சூழ வண்மையாகச்செய்து
தேசங்களெல்லாங்கிதிவிடுவென்ன கலிமாப்பயிரேற்றி
நாளுக்குநாள் தீன்பயிரோங்கி நாயனருளாலே
இவ்விதமாகநடந்துவருகுது இறையோனருளாலே
அந்தநாளையில்நடந்தசங்கதி யதனைச்சொல்விடுவேன்
சிந்தைகுளிரவெல்லாங்கேளுங் செல்வமிகவோங்க
காதுகள்குளிரவெல்லாங்கேளுங் காரணந்தனைச்சொல்ல
ஆதிபுவிபின்மகனாகிய அசன்றொன்னுமவர்
வேதனைமேன்மேலாகப்பொங்கிட விசனமுமேலோங்க
சந்திரன்போன்றமுகமும்வாடி துக்கமிகவாக
அல்லா தாதாவியகமி னருகில்வந்துநின்றார்
முகமுமவாடிட அருகினிலசனார்வந்துநின்றவுடனே
சால்கொழுந்தேயென்றன்மகனே யென்னவயனத்தாலே
மதிபோலான முகமும்வாடிட வந்தாயென்கிட்டே
என்னவயணமேதுவயண மென்னேடசொல்லும்
உன்றன்மனதினிந்தவிசனங்கள் வந்தவரலாறை
சீக்கிரமாகச்சொல்லிடுமென்று சிறந்தகபியுல்லா
கேட்டிடஅசனார்அந்தநபிமுன் கிருபைமிகப்பொங்க
அல்லாஅரசினிலேறிப்பேசிய அகமமதாய்வந்தவரே
பொல்லாக்குபிஃவாக்கேயில்லாமல் போக்கியதன்னபியே
ஏழைகட்கெல்லாமுதவிசெய்பு மிறசூல்நன்னபியே
நாளைமஹஷரில்மீட்டிடவந்த நாயகன்னபியே
என்றன்வார்த்தைதனைத்தாங்கள்கேட்டு இரங்கிக்கிருபைசெய்யும்
அநனுலெனக்குச்சந்தோஷமாகும அல்லாதிருத்தூதே
என்றுஅசனார்நபிமுன்பாக வீதுவசனமோத
கண்ணின்மணியாய்வந்தவென்மகனே கடுகநீர்சொல்லும்
ஒன்றுமறைத்திடவேண்டாமிப்போ உறுதியாகச்சொல்லும்
என்றுமுகம்மதுநபியஞ்சொல்ல எழுந்துஅசனாரும்
கொண்டல்கவியும்நபியேதந்தையே கூறிடக்கேளும்
மக்கந்தனிலேயெனக்கொருஇஷ்டர் மன்சூறென்பேர்க்கு
எட்டுநாளாய்சுரத்தால்வாடியிருக்கிறார்மெலிவாக
அன்னமுமுண்ணார்நீருங்குடியார் ரத்தசுரத்தாலே
சுருந்தப்பியேபோயிருக்கிறார் நீராச்சுரத்தாலே
பதைத்துந்துடித்துவாடிமெலிகிறார் பாரசுரத்தாலே
பார்க்கமுடியவில்லைக்கனவலைப் பெரியசுரத்தாலே
ஆகையால்தங்களைமன்சூர்நினைத்து அழுதுவெனக்குச்சொன்னார்
அவரிடசொல்லைக்கேட்டிடவெனக்கு அதிகவிசனமாச்சு

தங்களுக்கிதனைச்சொல்லிடுமென்று தயவொடுரைத்தாரின்று
ஆகையால்காணுந்தங்களைநாடி யசந்துநடந்துவந்தேன்
அவரிடவருத்தமெல்லாங்கண்டு அதிசயமாச்சு
பொறுக்காதுக்கமேன்மேலாக பொங்கிவருகுதெனக்கு
தாங்களெழுந்து அவனைக்காணத் தயவாகவாரும்
என்றனுறுபாவாவென்று இரக்கமோடுசொன்னார்

### மன்சூரைக் காணப் போகுதல்.

அந்தசொல்லைக்காதிலேகேட்டு அகம்மது நபியல்லா
சந்தோஷப்பட்டார்விடப்போக அந்நேரவேளையிலே
நாலுயார்களும்அஸ்காபெல்லாம் நபியைமொய்த்துக்கொண்டார்
பூவைவண்டுகள்சுற்றினாற்போல நபியைச்சூழ்ந்துகொண்டார்
அந்தவேளையில்நபியுல்லாவும் அதிககிருபையோடு
மன்சூர்தன்னைக்காணவெழுந்தார் மன்னர்நபியுல்லா
இரண்டுபக்கமும்நாலுயார்களு மிறைஞ்சிவாழ்த்திவர
மலையைச்சூழ்ந்தவாறுமசுகாப் மார்கள்சூழ்ந்துவரவும்
மதியினொளிபோல்நபியுல்லாவு மனதுமகிழ்வுபொங்க
தரையில்பாதந்தாங்காமேகம் தலைமேல்குடையிடவே
மன்சூர்வீடுபுகுந்தார்நபியு மற்றோரெல்லாரும்
நபியுல்லாவின்வரவைக்கண்டார் நல்லமன்சூரு
மாய்ந்தவுடலுக்குயிர்வந்தாற்போல் வல்லமன்சூர்க்கு
காய்ந்தபயிருக்குமழைவந்தாற்போல் கனத்தமன்சூர்க்கு
கட்டிலடங்காமகிழ்வுபொங்கிச்சு கனத்தமன்சூர்க்கு
நாயன்றூதேநபியுல்லாவே நபிமாருக்கரசே
எளியோன்றன்னைக்காணவந்தீரோ எனைப்பொருட்டாவெண்ணி
தாங்கள்வந்திடப்பாக்கியம்பெற்றேன் தரித்திரமுள்ளபாவி
என்றுநானாவிதமாய்ப்புகழ்ந்தார் இறசூல்நபிதன்னை
அந்தசொல்களைக்காதிலேகேட்டு அப்போநபியுல்லா
அரியபிணியையொழிக்குணீக்குவான் ஆதிபெரியவனும்
கொஞ்சமுமஞ்சிட வேண்டாம்நீயும் கொடியபிணியாலே
காற்றாய்ப்பறந்துபோகுஞ்சரமுங் கனத்தவுடலைவிட்டு
பஞ்சாய்ப்பறந்துவிலகிடுஞ்சரமும் படைத்தோனருளாலே
என்றசொல்லைமன்சூர்கேட்டு இறசூல்முகம்நோக்கி
என்றனுயிரேயிறையோன்றூதே இறசூல்நன்னபியே
உங்கள்துவாவின்பறக்கத்தாலே ஒன்றுங்குறைவில்லை
சஞ்சலமெல்லாம்நீங்கிப்போச்சுது தங்கள்வரவாலே
சூரியன்முன்னேபனிபோலெனக்குச் சுற்றமிகவாச்சு
பொழுதுபுறப்படவிருள்களோடிப் புகுந்தவாறாக
தங்களைக்கண்டவுடனேயெனக்குச் சரமுநீங்கிப்போச்சுது
ஆனல்தண்ணீர்தாகமுமெனக்குத் தணிக்கிடவேயில்லை
நெஞ்சுமுலர்ந்துபோகுதின்று கொடியதாகத்தாலே
நாவுமுலர்ந்துபோகுதெனக்கு மிக்கத்தாகத்தாலே

என்றுமன்சூர்நபிலையைப்பார்த்து இந்தபடியேசொன்னார்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போர்நபியுல்லா
மன்சூர்கொண்டதாகத்தணித்திட மன்னர்நபியுல்லா
தோப்புக்கடிபதிகாவற்காரனை சீக்கிரமாயிங்கே
அழையுமென்ன தீவுறியத்துக்கல்வி அஸ்காபுவந்தார்
அவரைப்பார்த்துநபியுல்லாவும் அப்போதுச்சொன்னார்
சீக்கிரமாகமாதளங்கனிபுஞ் சிறந்தமுந்திரியின்
கனியுங்கொண்டுவாருமென்றனர் சிங்கநபியுல்லா
அந்தவார்த்தைதனைகாதிலேகேட்டு அதபுடன்கைகட்டி
நபிகளுக்கெல்லாம்நபியாய்வந்த நாயகமானவரே
நிலவைவடிவிபிஸ்லைநத்து பேசியநாயகமானவரே
மானின்பின்னாலாற்றைத்தாண்டிய வல்லநபினூரே
நானொருசேதிசொல்கிறேன்கேளும் நபினூர்முகம்மதுவே
என்னசொல்வேனே துசொல்லே விறசூல்நன்னபியே
கண்ணிலும்நானுங்கண்டதில்லே காரணநன்னபியே
சொல்லவுமெனக்குபயமாயிருக்குது தூயநன்னபியே
சொல்லாமல்போனால்முடிகிறதில்லே தூயநன்னபியே
என்னகாரணமேதுகாரண மெப்படிசொல்லிடுவேன்
நாலுமாதமாநம்முடதோப்பிலுள் நாளுந்தவராமல்
பழுத்திடுங்கனிகளும்காய்களுங்காணேன் பாழாப்போகுதது
தங்கள்பேரன்மாரிரண்டுபேருக்கும் தவராமல்நானும்
அப்லூர்பழங்களைவாங்கிகொடுக்கிறேன் அவர்கள்தான்தின்ன
பூதமோபரீயோசின்னோதேவோ பேயோபிசாசுதுவே
என்னவந்துதினந்தின்றுப்போகுதோ யாதொன்றுமறியேன்
நாடிவருகிறபெயர்களியாரோ நடத்தமடியுங்காணேன்
தேடிவருகிறபெயர்களியாரோ தெரிகிறதேயில்லே
காவலாகக்காத்துமிருந்தேன் கண்ணில்பார்க்கவில்லே
என்னமாயமோயே அம்மாயம்மோ என்னென்றுசொல்வேன்
காணாப்புதுமையாயிருக்குதுநபியே கபீப்றசூலே
ஆகையால்கனிநானெப்படிகொடுப்பேன் அறிவின்கடலோனே
என்றுகவறிபத்துசல்வியர்சொல்ல இறசூல்நபிகேட்டு
என்னபுதுமையோ அறிவோமென்று இறசூல்நபியுல்லா
மன்சூர்தனைக்குதாகந்தெளிந்திட மருந்துசெய்துகொடுத்து
சந்தோஷமாகஅவிடம்விட்டு எழுந்துநபியுல்லா
நாலுயார்களும்அஸ்காபுமார்களும நாலுபக்கஞ்சூழ
பள்ளிக்கிவந்தார்பொழுதும்போனது பயகாம்பரப்போ
மக்ரிபுமேஷாத்தொழுதுக்கொண்டார் மகிழ்வாயெல்லாரும்
அந்தவேளையில்நபிமுன்பாக ஆதிப்புலியலியார்
ஆதியின்தூதேஅகமமதுநபியே யாசாயவந்தவரே
வீட்டுக்குப்போகஎனக்கு விடைகீரிப்போதுத்தாரும்
சீக்கிரமாகஎனக்குவிடைதீர்த்திடும்நன்னபியே
அந்தவார்த்தையைக்கேட்டு அலிபின்முகம்பார்த்து

சந்தோஷமாகவீட்டுக்குப்போகும் சிங்கப்புலியாரே
என்றசொல்லைக்காதில்கேட்டு ஏகன்புலியலியார்
சபையிலிடத்தில்விடையதுபெற்று நடந்தாரலிப்புலியார்
வீட்டிற்குப்போயினார் ஆதிப்புலியார் வெதுப்புமிகக்கொண்டு
முகமும்வாட ஆதிப்புலியார் மெலிவுமிகுதிகொண்டு
இருந்தார்பின்புநபியுல்லாவும் யார்களுமற்றோரும்
பள்ளிவிட்டிருந்துவணங்கிப்பின்பு பாரநபியுல்லா
ஆசுகாப்மார்கள்தங்களைப்பார்த்து அப்போதுச்சொன்னார்
எல்றன் அசுகாப்மார்களே கேளுமிப்போதென்சொல்லை
நம்முடதோப்பிலில்நித்தம்பழுத்திடும்நல்லகாய்கனியை
நித்தமுமவந்துதின்றுபோரவர் யாரோதெரியவில்லை
கண்டுபிடித்திடவேணுமந்த கள்வன்தன்னைக்காண
இன்றிரவென்றுமதிநிட வேணு மெந்ததிசையானோ
எந்தகுலத்திலுதித்தவீரனோ யென்னபெயரானோ
கண்டிடவேணுஞ்சீக்கிரமாகக் கள்வன்தன்னையிங்கே
பிடித்துவாருங்கண்டறிவோம்நாம் பெரியகள்ளன்றன்னை
என்றுசொல்லநபியுல்லாவும் அந்தாஸ்ஹாப்கள்
பலபலஆயுதமெல்லாம்பூட்டினார் பெரியசிங்கம்போல
தண்டாயுதமுஞ்சக்கரமெடுத்தார் இரண்டகைவாளும்
ஈட்டியம்புகளெல்லாமெடுத்தார் வானிடிபோல
குதிரையின்பேரில்நாறககாபுகள்கேசரிதானிகராய்
ஏறியேநபிமுன்வந்தாரெல்லாமேகனருளாலே
வந்தஅஸ்காப்மார்களைக்கண்டு வல்லநபியுல்லா
ஆதியின்கிருபையினாலே நீங்களிடம்தான்சென்று
பொல்லாபாவியான கள்வனை பிடித்துஇங்குவாரும்
அவனைவிடாமலென்றன்கிட்டே அடவாக்கொண்டுவாரும்
போங்களென்றுவிடையுங்கொடுத்தார் பெரியநபியுல்லா.

(கள்வனைப் பிடிக்கப்போகுதல்.)

அந்தசொல்லைக்காதிலேகேட்டு அஸ்ஹாப்மாரெல்லாம்
சந்தோஷமாகமக்கத்தைவிட்டு தெருக்கள்தான்தாண்டி
புலியைப்போலபந்தங்கள்பேசி போனார்தோப்புக்கிட்டே
சுற்றிவளைத்துக்கொண்டு தோப்பைதாக்கையெல்லாம்
காவலாகவேகாத்திருந்தார் கள்வன்தன்னைபிடிக்க
இந்தவிதமாஸ்காப்மார்க ளிருக்கும்வேளையிலே
கருமலைபோலசின்னும்வந்தது கள்ளத்தனமாக
தோப்பினுள்புகுந்துகண்டாரெல்லாம் துஷ்டக்கொடியசின்னை
நீண்டபனைமரம்போலவேயுடலும் நெடியபல்லுசளும்
சாலைப்போலவயிறுமாக சல்லடைபோல்கண்ணும்
ஊசலைப்போலவுடலில்ரோமமும் ஜாலகீண்டைகையும்
நகங்கள்வாசிபோல்இலங்கிட நாற்றவாடைவீச
தங்குதடையில்லாமற்றோப்பதனில் தனியாய்ப்பெரியசின்னு
வர்தனைக்கண்டுஅஸ்காப்மாரெலாம் வந்துவளைத்துக்கொண்டார்

ரொட்டியுங்கூசாந்தண்ணீரும் சீக்கிரங்கொடுவாவென்றுசொன்னார்
உடனேகொண்டுவந்துகொடுத்தார ரொட்டியுந்தண்ணீரும்
அந்தத்தண்ணீர்ரொட்டியைக்கண்டு அந்தபெரியசின்னு
அதிசயப்பட்டுநபியைப்பார்த்து அல்லாதிருத்தூதே
நாயகமானநபியேகேளும் நித்தந்தவறாமல்
அரிசிநூறுகலமாகநிதந்தின்பேனதுவும்பத்தாது
எண்பதுஆடுமறுத்துப்பட்சிப்பேனதுவும்பத்தாது
அப்படியிருக்கத்தின்னப்போதுமா அனலின்பசியாலே
எப்படித்தின்றுநான்பசியாறுவேனிரசூல்நன்னபியே
என்றுசொல்லிடசின்னதனைப்பார்த்து இரசூல்நபியுல்லா
பெருத்தமலைபோல்நிற்கிறசின்னே பெரியோனநாளாலே
தீராப்பசியுமுனக்குத்தீர்ந்திடும் தவனமுந்தணியும்
பிஸ்மில்சொல்லித்தின்றிடுமென்றார் பெரியநபியுல்லா
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போபெரியசின்னு
சந்தோஷமாகதின்றதுரொட்டியே தன்கையாலெடுத்து
தீராப்பசியுந்தீர்ந்துபோச்சுது தேவர்சொல்லாலே
அடங்காதாகமுமடங்கிப்போச்சுது அந்நேரவேளையிலே
இந்தபுதுமையைக்கண்ணாறகண்டு விருண்டபெரியசின்னு
என்றன்பெயரொன்தேசப்பெயருமிராஜன்பெயரோடு
படிபடியாகசங்கள்முன்பினில் தவறாமலடியேன்
சொல்லிவருகிறேன்கேளுநபியே சிந்தாமணிமுத்தை
மலைகளைப்போலவேஅடுக்கடுக்காகிய மாடகூடங்களும்
மறுகுகள்தோறுமலரால்கட்டிய தோரணவீதிகளும்
கட்டிலடங்காகடைகளும்விறகும் காவலர்வீதிகளும்
ஜெஜெயென்றுசேனைகள்கடக்கும் சிங்காரவீதிகளும்
சொல்லிடமுடியாமேன்மைகளுடைய செல்வமிகப்பொங்கும்
சீருஞ்செல்வமுமுள்ள மகரிபுசெழித்தவளநாடு
அந்ததேசத்துக்கதிபதியானோன் அதிகாரம்பெற்றோன்
இராசருக்கெல்லாமிராசனுவந்த மலுக்குமகாராசன்
பெரியகுடம்போல்மகுடந்தரித்த பெரியவலியராஜன்
எண்பதுபாரவாளினையுடையோன் எங்கள்பெரியராசன்
நூறுபாரதண்டாயுதத்தை நேராயெடுக்கும்ராசன்
ஐம்பதுபார அம்பினையெடுக்கும் அரிக்கொப்பானராஜன்
ஐம்பதுபாரவீட்டியையெடுக்கும் அதிகவீரராசன்
அவனுக்குநிகராவொருவருமில்லை ஆங்காரராசன்
சொல்லிடமுடியாவாழ்வினையுடைய கற்றவீரராசன்
கணக்கிட்டோதமுடியாபடையுள கனத்தவீரராசன்
பூதப்படையும்பத்துலக்ஷமாம் பெரியராசனுக்கு
குதிரைப்படையுமெட்டுலக்ஷமாம் கொற்றவராசாக்கு
ஏழுலக்ஷமாம்பஜிரின்படைகள் என்றன்ராசாக்கு
எண்பதுலக்ஷம்சங்கிப்படையா மெங்கள்ராசாக்கு
நல்லறும்பப்படையுங்கோடியாம் நல்லராசாக்கு

உனக்குச்சுவர்க்கவாழ்வதுங்கிடைக்கு மோதிடுகவிமானே
நரகவேதனையெல்லாமகன்றிடு மோதிடுகவிமானே
நல்லநல்லசுகங்கள்கிடைத்திடு மோதிடுகவிமானே
என்றுசொல்லிட ஜின்னதுகேட்டு ஏங்கித்திடுகலங்கி
வல்லநபியேயென்னிட வார்த்தைதனை வாகாயினிகேளும்
என்னிட ராஜனிந்தவிதந்தனை யறிந்துவிடுவானாகில்
துண்டுதுண்டாய்வெட்டிப்போடுவா னென்னையுமுன்னையுமே
உயிரோடிருந்திடவைக்கானம்மை யொன்றேவெட்டிக்கொல்வான்
எல்லாச்சேதியுந்தாங்களுங்கேட்டு ஒன்றுமறியார்போல்
உங்கள்தீனில்வரவேசொல்கிறீ ரெப்படிநான்வருவேன்
உங்கள்சேனைகளெல்லாங்கண்டேன் ஓதிட வினிகேளும்
சொல்லிடவெனக்குநாவுமவாவில்லை சோதிநன்னபியே
படையின்தலைவர்களராஜன்கைக்கீழ் பதாதிமிகுசமுண்டு
உங்களபடையெல்லாமொருவன்கைக்குப் பற்றாதொருபோதும்
பஞ்சுபஞ்சாய்ப்பறந்துபோகுவார் படைவீரர்கள்முன்னால்
அப்படியிருக்கவெப்படிகவிமா அஞ்சாமல்படிப்பேன்
அவனையடக்கிடவும்மாலாகுமோ அல்லாதிருத்தூதே
அப்படியவனைவெட்டிஜெயித்திட ஆகுமேயாருக்கால்
அஞ்சாமல்நான்கவிமாஓதுவேன் அண்ணல்நன்னபியே
பயமில்லாமல்நான்கவிமாவோதுவேன் பயகம்பரானவரே
இப்படிஜின்னுசொல்லிடநபி மிறையோனருளாலே
உன்னிடராஜன்சேனையைவெட்டிட வுதவியெனக்குச்செய்வான்
அரியாரொருவரேபோதுமெனக்கு அவனைவெற்றிபெற
அஞ்சாமல்நீகவிமாஓதிடு அல்லாவுதவிசெய்வான்
சலியாமல்நீகவிமாஓதிடு சஞ்சலந்தான்போக
என்றுநபியுல்லாவுஞ்சொல்லிட வின்பமிகுதிகொண்டு
தடங்கலொன்றுஞ்சொல்லாமல்ஜின் சீக்கிரமாயப்போ
கலுமாவோதியீமான்கொண்டது நபிபுசொற்படியே
கவிமாவோதிடநபியுல்லாவுங் கருணைமிகப்பொங்கி
சையதென்றுபேருமவைத்தனர் சிறந்தநபியுல்லா
உடுமானங்களுமுடுத்திடக்கொடுத்தா ருத்தநபியுல்லா
வெகுமதியெல்லாஞ்ஜின்னதுவாங்கி வீரியமிகப்பொங்கி
நாயனபியேநபியுல்லாவே நான்சொல்லக்கேளும்
தங்கள்பெருமைகளைராஜன்முன் பினில் சற்றுமஞ்சாமல்
சொல்லிடவெனக்குமதுவாகச்செய்யும் செல்வமுள்ளநபியே
பயமில்லாமலெல்லாஞ்சொல்ல வாகுமெனக்குத்தாரும்
என்னுடனொருவனைக்கூட்டியனுப்பிடு மிறசூல்நன்னபியே
தயிரியமாகப்போவேன்றனு தனியோனபிமுன்னே
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அகமமதுநபியுல்லா
சந்தோஷமாகஜின்னைப்பார்த்து சற்றுமஞ்சாதே
அல்லாதகயத்துனக்குச்செய்வா னவன்முன்னேபேச
என்றன்சக்தியெல்லாஞ்சொல்லிடு ஒன்றுக்குமஞ்சாமல்

என்றவுனக்குவேண்டுமாயிருக்குது என்னைக்கேளுமென்றார்
நபிகளுக்கெல்லாம்நாயகமாகிய நாயனாரேயேகேள்
எனக்கொருகுறைவுமினியேமயில்லை யெல்லாமெனக்குண்டு
உங்கள்துவாவின்பருக்கத்தாலே யொன்றுங்குறைவில்லை
வேண்டியதெல்லாங்கிடைத்ததெனக்கு வேண்டியதொன்றில்லை
போயிட்டவெனக்குவிடைநீர்தாரும் போறேனென்பதிக்கு
என்றுசொல்லிடநபியுல்லாவும் இன்பமிகப்பொங்கி
அன்னையாய்ப்போயிட இப்புருஷீமைச் சீக்கிரமாயழைத்து
மன்னவராகிய இப்புருஷீமே யெனதுமகிழ்வாக
நீயுனுடன்கூடத்துப்போரும்செதிசொல்லிடக்கேள்
மகரீமானுபீராஜாகிய மலுக்குமலுக்குமுன்பில்
நம்பிடதீனின்செதிசொல்லும் ஞானிதமாச்சொல்லும்
என்னவதற்குஅவன்சொல்வானோ அதனைக்கேட்டுக்கொள்ளும்
தீங்கில்லாமல்சீக்கிரமாக இவிடம்வந்துசேரும்
என்றுஞானிதமாச்சொல்லி யிறசூல்நபியுல்லா
இருவர்தனக்கும்விடையுங்கொடுத்தார் இறசூல்நபியுல்லா
மேகக்குடையிடநபியுல்லாவும் வேதப்பள்ளிவிட்டு
எழுந்துவீட்டுக்குப்போனாரப்போ இறசூல்வேதாம்பர்
அந்தவேளையில்சிபுறாயீலு மன்பாத்தாவிறங்கி
ஆதியின்றாதேயகமமதாகியே அல்லாசலாமுஞ்சொன்னான்
உன்றனக்கிந்தசேதியைநாய னேதிடவேசொன்னான்
அந்தசெதிபுமென்னவென்றால் அகம்மதுசல்லாமியே
யென்னைப்பிடிக்கநுகாதுலகில் திரண்டமாளிடர்க்கு
அதிகவல்லமைவீரமுமுண்டு அந்தசின்களுக்கு
தங்களிடத்தில்விடுமாடியாக தனியொன்றிருக்காதே
வந்தோர்மலக்குப்பிடித்துக்கொடுத்தார் வல்லோன்றிருத்தாதே
அமறுமாதியுர்கள்களிடத்தினி லவனைப்பிடித்துவந்தார்
ஆனையாலிந்தசீமையில்பெரிய சண்டையுமாகிவிடும்
அதிகபடையும்வலிமையுமுள்ளவன் அடக்காவீரராஜன்
அலியார்தனக்குப்பதிலுள்மட்டும் அடிக்குக்குளிக்காய்ச்சல்
அவருமவெளியேவரக்கூடாது அந்தநாளுமட்டும்
குளிர்ந்தகாற்றும்படக்கூடாது கொற்றஅலியார்க்கு
என்னசண்டைகளானபோதிலு மவர்க்குச்சொல்லலாகா
இப்படிநாயன்சொன்னானென்று இறசூலிருமுன்பில்
சொல்லிசிபுறாயீல்போனார்வானம் சிறகைவிரித்துப்பறந்து
இந்தசேதிகள்தன்னைக்கேட்டு இறசூல்நபியுல்லா
அதிகவண்ணமாயிருந்தாரென்று அல்லாதனைநாடி

மலுக்குராசனுக்குச்சேதிசொல்லப்போகுதல்.

இப்புறுஷீமும்மாயதுசின்னனும் எழுந்துமக்கமவிட்டு
காடுமலைகள்தொலைந்துநடந்தார் கான்யாறுந்தாண்டி
தோப்புவனங்களைத்தாண்டித்தாண்டியே சொகுசாத்தானடந்தார்

இப்படியிருவருமாகவேவந்து இன்பமொடுசெல்ல
கற்பதியாகியமகரிபுபட்டணம் கோட்டைக்கண்ணுற்றுகண்டார்
மலைபோலுயர்ந்தகோட்டைமதிலுமாம் வர்சமபடிபெரிதாம
இருப்புமூலைகளடித்தகதவுமா மிலங்குங்கோட்டைக்கதவு
பட்டணத்துள்ளேபுகுந்துஇபுறுகீம் பார்த்தார்வேடிக்கைகள்
தெருக்களதோரணங்கட்டிய சிறந்தவீதிகளும
அணியணியாகியகுதிரைப்பந்தியும் யானையின்பந்திகளும்
கோட்டைமலைபோலொட்டையின்பந்தியும் நிறைந்துவிருக்கக்கண்டார்
பல்லக்கேறிப்போகும் வீரரும் படையின்வீரர்களும்
யானையின்மீதிலேயேறிடும்வீரரும் குதிரைவீரர்களும
கூட்டங்கூட்டமாயெங்கணும்நிறைந்து கூடியிருப்போரும்
மலைகள்போலசிங்கள்திரிவது மன்னர்கண்ணில்கண்டார்
முத்துமணிகள்பதித்தகொலுமேல் மன்னுமலுக்குராஜன்
மந்திரிமார்கள்சூழ்ந்துவிருந்திடமா முலுக்குராசன்
ஜின்னின்படையின்தலைவமார்களுஞ்சுற்றிலுஞ்சூழ்ந்திருக்க
பூதப்படையின்தலைவமார்களும் பூராய்ச்சூழ்ந்திருக்க
சங்கிப்படையின்தலைவமார்களுஞ் சேசேயெனவிருக்க
துருக்கிப்படையின்தலைவமார்களும் சூழ்ந்துகூடியிருக்க
உறுமிப்படையின்தலைவமார்களு முறமாயருகிருக்க
கத்திகட்டாரீயிட்டகள்பிடித்து காவலர்சூழ்ந்திருக்க
பெரியமலைபோல்மகுடந்தரித்து பூரித்தகமகிழ்ந்து
சிம்மாதனத்தின்மீதினிவிருந்தனன் சிங்கமலுக்குராஜன்
இந்தவிதமாமலுக்குராச னிருந்திடுங்கொலுமுன்னே
நயினர்விடுத்தசைதுசின்னேடு இபுறுவறிமுமாய
கிண்டராசன்முன்பினில்சென்றார் நெருங்கியசபைமுன்னே
அரசனைக்கண்டுசைதுசின்னனது அடியேதொழுதுநின்றார்
இபுறுகீமெனுமவறாபென்பவர் சும்மாயெதிரில்நின்றார்
சங்கைகளொன்றுஞ்செய்யாநின்றார் சமர்த்தரிபுறுகீம்
பணியாநின்றிடராஜன்கண்டு பாரக்கண்சிவந்து
பல்லைநெறநெறவென்னகடித்து பகர்வானந்நேரம்
இந்தமனிதனெப்பதியுள்ளவ னிவ்விடமேன்வந்தான்
என்றனைப்பணிந்திடாநின்றவனியாரெனக்குச்சொல்லுமென்றான்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போதிபுறுகீம்
கொஞ்சமும்பயமில்லாமலப்போ கொடியோன்தனைப்பார்த்து
என்னையாரென்றுஎன்றனைக்கேட்ட ராசாவேகேளும்
என்றன்பெயரென்சிமையின் பெயரும்யான்சொல்லக்கேளும்
மின்றனையாண்டிடுமரசனார்பெயரும் யான்சொல்லக்கேளு
உந்தனிடத்துக்குஇப்போநான்வந்த உற்றசேதியேகேள்

(மக்கத்தின்சிறப்பைச்சொல்லுதல்.)

என்றன்பட்டணமக்கமெனும்பதி யிருநல்பட்டணமாம்
சந்திரசூரியர் நிலவிப்பாடும் சிறந்தமககாடு

பறவைகளொன்றுமெதிரில்பறந்திடா பள்ளியுள்ளநாடு
படைத்தோன்றஹமத்தெங்கோமிறங்கும் பாங்கானநாடு
வரிசைகள்மிகுந்தவளப்பதியாகிய வாகுள்ளநாடு
தேசத்திலுள்ளோரெல்லாமவந்திடும் சிறப்பானநாடு
இந்தஉலகினிலதற்குசரியே ஒருநாடுமில்லை

( நபியுல்லாவின் சிறப்பைச்சொல்லுதல். )

அந்தகாரத்ததிபதியானோர் அகம்மதுநபியுல்லா
மூந்தவொளியினிலுதித்துப்பிறந்தவர் முகம்மதுநபியுல்லா
சந்திரன்பூமியில்வந்திடச்செய்தவர் சறுதார்நபியுல்லா
மானுக்குப்பிள்ளையாயிருந்திடவந்தவர் வல்லநபியுல்லா
அரசினிலேறியேபேசிவந்தவர் அண்ணல்நபியுல்லா
காட்டினில்கிளையழைத்தகன்னபி காரணநபியுல்லா
கேட்டிடுங்காரணக்காட்டிடும் நன்னபிகேள்வினபியுல்லா
அடங்காராசரையடக்கிடும்வேதர் அகம்மதுநபியுல்லா
எதிர்த்திடும்ராசரைவெட்டிபிளந்திடும் எங்கள்நபியுல்லா
பொல்லாக்குணக்களைந்திடவந்த பெரியநபியுல்லா
கலிமாப்பயிரைவுலகினில்விதைத்த பீருநபியுல்லா
அவருடகாரணமுழுதுஞ்சொல்லிட ஆகாதெவராலும்
சொல்லிடஎன்னாலொன்றுமுடியாது தூயநபியுல்லா

(நால்யார்களுமற்றவர்களுடையபெருமையைச்சொல்லுதல்.)

இந்தவரிசைகள்கொண்டநபிக்கிருக்கிறார்நால்யார்கள்
ஒருவர்க்கொருவர்வலுமையினுயர்ந்தோர் உலகிலொருவரில்லை
சண்டைகளத்தில்போவாராகில் சத்துருமஞ்சார்கள்
துண்டுதுண்டாமண்டைகளுருண்டிட வெட்டிகெலித்திடுவோர்
அவர்களோடெதிர்த்திடஉலகினில் யாருமில்லையெதிராய
சிங்கமும்புலிகளும்பயந்திடுங்கண்டால் தீரவலியுடையோர்
யாளிகள்தேவுகளெல்லாமஞ்சிடும் யார்கள்நால்வரிலே

(அலியார்பெருமையைச்சொல்லுதல்)

ஒருவர்அலியாரென்று விருக்கிறானோராஜகேசரு
அவருடவல்லமைதன்னைச்சொல்லிட ஆகாதென்னாலே
புலியுமெதிர்த்திட அஞ்சிடுமவர்க்கு பெரியபெரும்புலியாம்
சிங்கமுமெதிர்க்கஅஞ்சிடுமவர்க்கு பெரியசிங்கமவர்
தேவுகள்பரிகள்ஜின்களுமெதிர்க்க இராதெவராலும்
தவுடுபொடிபோல்போகுவரல்லது தயிரியஞ்செய்யார்கள்
பூனைக்கெலிகள்பதுங்கும்போல் பதுங்கியொளிப்பரெல்லாம்
ஆட்டுகூட்டத்திலுள்புலிபாய்வதுபோல் அரிபோலபாய்ந்திடுவார்
பருந்துகுஞ்சினையெடுத்திடும்வாறுப் பாய்ந்தெடுத்திடுவார்
குடல்வேறுதலைவேறுக் கூட்டிவெட்டிடுவார்
தயிரின்குடம்போல்மூளைகள்சிதறிடத் தண்டத்தாலடிப்பார்
ஆறுபோல்ரத்தமோடிட வெட்டுவார் சாதிப்புலியுல்லா

அவரேறிவிட்டிருக்கவாகுமோவுலகில் அல்லாபெரும்புவியாம்

(துல்துல்குதிரையின்பெருமையைச்சொல்லுதல்)

இப்படிப்பட்டவசேறிசெங்குதிரைபோ லுலகில்குதிரையில்லை
இந்தக்குதிரைகள்போலவல்ல இலங்குந்துல்துல்து
காற்றைப்போலப்பறந்துபோயிடுங் கண்ணுக்குத்தெரியாமல்
கடலைப்பாய்ந்தேறுயக்கலக்கிடும் ஒருநொடிக்குள்ளாக
ஒலித்திடுமோகில்வானிடிபோலவே யுலகெல்லாமசையும்
ஒருநொடிக்குள்ளேயுலகெல்லாஞ்சுற்றிடுந் துல்துல்குதிரையது
எதிர்வருவோர்தங்களைப்பல்லால் கடித்துஉதறிப்போடும்
பின்புறமவர்தால்காலாலுந்தந்து உயிரைப்போக்கிவிடும்
மேகத்தைப்போலவேகமாப்பறக்கும் வெற்றிச்சண்டைக்களத்தில்
மின்னலைப்போலகுதித்துமேபாய்ந்திடும் வேகதுல்துலது
காலால்ராஜர்கள்தலையைப்பந்துபோல் காணப்பறக்கடிக்கும்
சங்கெமிதிப்பதுபோலவேதலைகளைத் தாளால்தான்மிதிக்கும்
கண்கள்பிதுங்கிடப்பல்களுதிர்ந்திடக் காலால்தான்மிதிக்கும்
அந்தகுதிரையின்பெருமையைச்சொல்ல ஆகாதெவராலும்
அதுஇவ்வுலகின்குதிரையல்ல அல்லா அறிவான்காண்

(சுல்பக்காரின்பெருமையைச்சொல்லுதல்.)

அவர்கைதன்னில்பிடிக்குங்கத்தியி னதிசயஞ்சொல்லிடக்கேள்
இரும்பால்செய்தகத்திபோலல்ல இலங்குஞ்சுல்பக்கார்
மலைகளைவெட்டினுலும்தூள்தூளாக மண்ணில்கலந்துபோகும்
மகுடமுடிகள்பதித்தராசாக்கள் மண்டைகள்தனைத்துளைக்கும்
குதிரையானைகள்தலைகளைவெட்டியே குடித்திடும்ரத்தமதை
கண்ணைத்தெறிவுகள்மங்கிடும்வாளின் கனத்தஜோதியாலே
மின்னலும்மவெட்கிடும்பிரகாசத்தால் வெற்றியின்வாளாலே
தகதகவென்னப்பிரகாசித்திடும் தரணிசுல்பக்கார்

(கம்பருடையபெருமையைச்சொல்லுதல்)

அலியின்சேவகனாகவொருவ ரிருக்கிறார்கம்பரென்று
அவருடனெதிர்ப்போருலகினிலில்லை ஆண்மையுள்ளகம்பர்
அதிகசேவகனவர்வீரிய அன்னலாளகம்பர்
வெட்டுகைக்குஞ்சார்குத்துக்குஞ்சார் வெற்றியுள்ளகம்பர்
பட்டாகத்திலையக்கையிலெடுத்தால் படையெல்லாமடங்கும்
உயிருக்குத்துணிந்தவரொன்றுக்குமஞ்சா ருற்றிடுஞ்சண்டையிலே
எதிர்த்தோருயிரைவாளத்தில்சேவு பூர்க்கமிகவுடையார்
இப்படியெல்லாம்ராஜன் முன்பில் இபுறுகீம்சொன்னார்
மலுக்குராசனைசின்னதுபார்த்து மன்னவனேசேவகரை
அப்படிப்பட்ட வீரரொருவரென்னைக்கண்டவுடனே
என்னுடனெதிர்த்துச்சண்டைகள்செய்து என்றன்வலியோடங்க
பின்கட்டாகவென்றனைகட்டிப் பிடித்தார்தன்கையால்

வலியசிங்கத்தைநரிகள்கூடி வெருட்டமுடிந்திடுமா
கிளிப்பிள்ளையைக்கொன்றிடகாகமுங் கிட்டேபோகுமோ
சிறியமீன்களெல்லாங்கூடி சுறாவைவென்றிடுமா
பாம்பினைத்தேரைகள்கடித்துக்கொன்றிடப் பாய்ந்துகெலித்திடுமா
புலியினையாடுகள்கூடிவெருட்டிடப் புந்திதுணிந்திடுமா
எழுசான்மனிதனலாகுமா வென்னைக்கெலித்துவெல்லப்படையால்
பஞ்சையாய்ப்பிறந்தமனிதனலாகுமா என்னைக்கெலித்துவெல்ல
ஏழைமனிதனெதிர்த்திடலாகுமா என்னைக்கெலித்துவெல்ல
சிறியமனிதனெதிர்த்திடலாகுமா என்னைக்கெலித்துவெல்ல
கிலுகிலுவென்றுசிரித்தானையா ராசாமாமலுக்கு
மீசைமேல்கையைப்போட்டானையா ராசாமாமலுக்கு
நல்லதுநல்லதுஅறிவேனென்றான் ராசாமாமலுக்கு
பல்லைநெறநெறவென்றுகடித்தான் ராசாமாமலுக்கு
என்னைக்கெலித்திடவருவோர்தனக்கு இரும்புமனதுவேணும்
ஆயிரங்கைகளுமாயிரங்கால்களு [illegible]முடல்வேணும்
அப்படிப்பட்டவர்வந்தபோதிலு மம்பால்மாண்டிடுவார்
ஏழைசண்மனிதனுமென்னைவெல்லுவா னென்றுசொன்னனடா
மக்கமென்றோதுமூரையும்பிடித்துக் கோட்டையுந்தானிடித்து
மண்ணொடுமண்ணாசலந்துபோடுவேன் மடையாயறியாயா
அவ்வூராளுமுகம்மதைவெட்டி அழித்துக்கெடுத்திடுவேன்
அலியென்போனைத்துண்டாய்வெட்டி யறுப்பேனவன்தலையை
சேவகனுகியவீரியமுள்ளகம்பர் தலையோடு
சின்னபின்னமாஅங்குள்ளோரைச் சிறைநான்பிடித்திடுவேன்
இப்படிநானுஞ்செய்யாமல்போனல் என்பேர்மலுக்கல்ல
பேடிக்கெல்லாம்பேடியானவன் பெட்டைநானாயிடுவேன்
இப்படிப்பந்தயபாஷைகள்சொல்லியே யிடிபோல்சத்தமிட்டு
தன்னருகிருக்கும்ராசரைப்பார்த்துச் சொல்வான்ராசாவும்
என்னிடசேவகமார்களேநீங்க ளெல்லாருங்கேளும்
காதுகொடுத்துக்கேட்டிடும்நீங்கள் கடுகவென்சொல்லை
எனக்குளதிரிகளில்லையென்றிருந்தே னிந்தநாளைக்குப்பின்
எதிரியாய்முகம்மதென்றொருவ னுதித்தானென்னைக்கெலிக்கவென்று
மக்கமாநகராயாள்கிறானென்று மகாகெட்டிக்காரன்
சேவகப்படியலியாரென்றும் சூரன்கம்பரென்றும்
இப்படிப்பட்டவரிருக்கிறசேதியை யின்றுநான்கேட்டேன்
இனிமேல்சும்மாவிருப்பதுவெனக்கு ஆண்மைத்தனமுமல்ல
கேட்டிருப்பதுபேடிகள்வேலை பெண்டுதனத்தார்வேலை
மீசைமுளைத்த ஆண்பிள்ளையானல் முடிக்கவேணுஞ்சண்டை
சத்துவமுள்ள ஆண்பிள்ளையானல் சண்டைசெய்யவேணும்
மக்கநாட்டையும்முகம்மதுதன்னையு மன்னவரலிதனையும்
சேவகர்கம்பரிவர்கள்தலையைச் சீக்கிரமாயறுத்து
நாட்டையழித்துப்பெண்டுபிள்ளைகளை நானினைத்தபடியே
சிறையாய்ப்பிடித்துவருபவரிதில்யார் சொல்லுமெனக்கேட்டான்

(இராசனுக்கு மற்ற இராசாக்கள் சொல்லுதல்)

அந்தச்சொல்லைக்காதிலேகேட்டு அரசன்படைத்தலைவர்
கைகளைக்கட்டியெதிரினில்நின்று கனத்தராசாவே
எங்கள்சொல்லைக்காதுகொடுத்துக் யின்பமாக்கேளும்
இராசருக்கெல்லாமிராசனுகிய ராசாமாமலுக்கே
வீரியர்க்கெல்லாம்வீரனுகிய ராசாமாமலுக்கே
எங்கள்சொல்லைக்கேட்டிடுமையா ராசாமாமலுக்கே
எங்களைப்பாண்டிடும்வீரசூரா ராசாமாமலுக்கே
உன்னைக்கெலிக்கிடவுலகிலிருண்டோ எங்கள்ராசாவே
தேவாதிதேவர்களானபோதிலும் இருமுன்வருவாரோ
முனிகள்கோடியாய்த்திரண்டபோதிலு முன்னில்வருவாரோ
பூசகுலத்தாருன்னைக்கண்டால் போகிடுவார்நகிரை
சின்னின்குலத்தாசர்கண்டபோதிலும் திடுக்கிட்டுச்சாவார்
தேவர்கூட்டங்கண்டபோதிலும் திகைத்திட்டுச்சாவார்
அப்படியிருக்க எவருன்னேடு எதிராளியாவார்
மலைகளும்பொடிபொடியாகிப்போகுமே மகாராசாவே
கடல்களுஞ்சேருய்ப்போகுமுன்காலால் கனத்தராசாவே
எளியோர்நாங்களெத்தனைபேரோ இருக்கிறேமுன்னிட்டே
எங்களைமாத்திரமேவினுல்போதும் எதிராளிமேலில்
கோட்டைகள்தன்னையிடித்துப்போடுவோம் கொற்றராசாவே
நாட்டையழித்துநாசமுஞ்செய்வோம் நல்லராசாவே
தலைகளையறுத்துக்கொண்டுநாமவருவோம் தயிரியராசாவே
மலைகளைப்பஞ்சாய்ப்பறக்கச்செய்வோ மன்னராசாவே
இலைகளையுதிர்க்கும்போலவெட்டுவோ மெங்கள்ராசாவே
தங்கள்சொற்படிநடந்திடநாங்கள் சீக்கிரஞ்செய்திடுவோம்
எங்களையனுப்பினுல்போய்வரஞ்சண்டைக்கு எங்கள்ராசாவே
இப்படிநாங்கள்சொல்வதுசரியா எங்கள்ராசாவே
நாங்களிருக்கநீர்போவதுஞாயமோ நாயகராசாவே
உத்தாவீந்தால்செய்துமுடிப்போ மொருநொடிக்குள்ளாக
அனுப்பிடுமென்றுசொன்னுரெல்லா மரசன்முலுக்குடனே
அந்தச்சொல்களைக்காதிற்கேட்டு ராசாமாமலுக்கு
சந்தோஷமேல்மேலாகப்பொங்கிச்ச ராசாக்காளுனும்
நல்லதுநல்லதுவென்றுசொல்லினு னணமற்றராசன்
அந்தவேளையில்பொழுதுமபோச்சுது அப்போராசாவும்
எல்லாம்வீட்டுக்குப்போங்களிப்போ நாளைவாருமென்றுன்
அந்தச்சொல்லைக்காதிலேகேட்டு அரசரெல்லாரும்
பாதம்பணிந்துஅவரவர்வீட்டுக்குப் போனுரெல்லோரும்
இராசனெழுந்துஅரண்மனைபோயினுன் ராணுவர்தனைவிட்டு

(இராசன்தேவிகனவுகாணுதல்.)

அரண்மனைபுகுந்தான்மலுர்க்குராசனு மந்தவேளையிலே

தாதிப்பெண்களெதிரில்வந்தார் தண்ணீர்தனைக்கொண்டு
பாதத்தைக்கழுவியோர்விரிப்பினைவிரித்துப்பாராசாக்கு
விதவிதமானபோசனவகையும்வைத்தார்கொடுவந்து
விதவிதமானகறிகளும்வைத்தார் வேண்டியவஸ்துவெல்லாம்
குடிக்கப்பனிநீர்கொண்டுவைத்தனர் கொற்றவன்முன்பாக
அப்போராசன்போசனமுண்டு ஆங்காரத்தோடு
முத்துகள்பதித்தபஞ்சணைமேலே முடிமன்னாராசன்
குந்தியிருக்கையில்மனைவியும்வந்துகூடவுட்கார்ந்தாள்
இருவருமாகதாம்பூலந்தரித்து இருந்தார்மகிழ்வாக
சந்தனமத்தர்சவ்வாதோடு தாங்கள்பூசிக்கொண்டு
சந்தோஷமாகப்படுத்துத்தூங்கினார் சகலமுந்தூங்கினது
அந்தவேளையில்ராசன்மனைவி யவளொருகனவுகண்டு
திடுக்கென்றெழுந்தாள் கலக்கமுங்கொண்டு ராசாதேவியரும்
படபடவென்றுநெஞ்சுதுடித்திட்டெழுந்தாள்தேவியரும
குழறிக்குழறித்தட்டியெழுப்பினாள் ராசாவைக்கன்னி
என்னையெழுப்பியவயணமுமென்ன என்றன்றேவியரே
கண்ணின்மணியேகாமக்குயிலே கண்ணானபெண்ணாட்டியே
என்றுசொல்லவெழுப்பினபென்னைச் சொல்லென்றுகேட்டான்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போதேவியரும்
இராசனுக்கெல்லாமிராசாவாகிய ராசாவேகேளு
இராத்திரிவேளையில்தூங்கும்போது நானொருகனவுகண்டேன்
சேவகப்பாடியொருவன் குதிரைமேல் சிங்கப்போலேறி
உருவியகத்தியைக்கையிலேபிடித்து ஊருக்குள்ளேவந்தான்
ஆலமரத்தையவன்வெட்டியேபோட்டானுங்காரங்கொண்டு
தழைத்தமரத்தையவன்வெட்டியேபோட்டான்தடையுமில்லாமல்
அம்மாகிழவியிருந்தபேரெல்லா மழுதுமலையக்கண்டேன்
வேறொருமரத்தைப்பிடுங்கி யெறிந்திடவிசனம்பெருகக்கண்டேன்
பரதேசிபோல்நாலுமலேசிடப் பதைத்துஅழவேகண்டேன்
கம்பீடதேசசனங்களைவெட்டிட நானொர்கனவுகண்டேன்
தன்னிளமரக்கிடக்கண்டேன்ராசனே சஞ்சலமிகவாக
இந்தவிதங்களைசொல்லிடுமெனக்கு இந்தவெண்ணமிக்க
கண்டகனவதுபொல்லாக்கனவாய்க் காணுதராசாவே
இன்னங்கைகால்நடுக்கமுந்திடுக்கமும் நிற்கிலேராசாவே
என்றுமனைவியாள்சொல்லிடக்கேட்டு எங்கிமலுக்குராசன்
சித்திரம்போலசும்மாவிருந்தான் சிலநேரமட்டும்
எந்தன்பிராணநாதாவேகேளென்னமயக்கங்கொண்டாய்
சொன்னகனவிற்குப்பொருள்சொல்லாமல் சும்மாவிருக்கிறாயே
ஏனேயெனக்குஅடிக்கடிவிசனம் வருகுதுராசாவே

(இராசன்மனைவிக்குச்சொல்லுதல்)

என்னடிபெண்ணேயென்கண்மணியே யொன்றுக்குமஞ்சாதே

காமக்கூட காமத்தேனே கண்மணிநாயகியே
கிளிபோல்கொஞ்சிப்பேசிடுமென்றன் கிஞ்சுகநாயகியே
அன்னம்போலநடையினையுடைய அழகுநாயகியே
முக்கனிதன்னைப்பழித்திடுஞ்சொல்லின் மோகினிநாயகியே
நீகண்டகனவதுநல்லகனவடி நாணயநாயகியே
நம்மையெதிர்த்திடநாடியபேருக்கு நாளுமாகாது
கொடியவருத்தங்கள்பெருவாரென்கையில் கூட்டங்கூட்டமாக
தவிடுபொடிபோல்துண்டுதுண்டமாய் சேதமாய்மடிவார்
நமக்கொருதீங்குமிதளவில்லை நடக்கும்சயமிகுதி
அஞ்சாதேயென்றுதயிரியஞ்சொன்னான் ராசாமாமலுக்கு

(இராசன்விசனப்படுதல்.)

மனைவியாள்கண்டகனவினைநினைத்து ராசாமாமலுக்கு
சொல்லொணாத்விசனமாகினான் ராசாமாமலுக்கு
தலையைக்கவிழ்ந்துச்சஞ்சலமாகினான் ராசாமாமலுக்கு
பலபலவிதமாயோசனைசெய்தான் ராசாமாமலுக்கு
வெறிகொண்டாற்போல்கலக்கமாகினான் ராசாமாமலுக்கு
சேதமும்நமக்குவந்ததென்றெண்ணித் திகைத்தான்மாமலுக்கு
நித்திரையற்றுப்போச்சுதுமேன்மேல் நீள்முடிராசாக்கு
நிலத்தினைக்கீறியோசனைசெய்வா னெஞ்சகலக்கமாகி
பஞ்சணைமெத்தைதன்னையும்விட்டான் படுக்கான்திகிலாகி
என்னசெய்வோநாமேதுசெய்வோ மென்றுமிகவாடி
தீயினில்விட்டமெழுகதுபோலதேகமிகவுருகி
தயிரின்குடம்போலவல்லமசிந்திடத் தயிரியந்தனைவிட்டான்
மணலினில்போட்டமீனதுபோல மனதுபதைபதைத்து
தன்னிடசாமியைமனதினில்நினைத்துத் தயிரியமுஞ்செய்வான்
இவ்விதமாகராசாமலுக்கு இருந்தான்சஞ்சலமா
இப்படியிருக்கையில்பொழுதும்விடிந்தது எழுந்துமாமலுக்கு
வாத்தியமுழங்கிட மேளங்களுதிட ராசாமாமலுக்கு

(படைத்தலைவர்கள்கொலுமுன்வருகுதல்)

பூதப்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
சங்கிலிப்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
துருக்கிப்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
பரியின்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
தூமிப்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
யானைப்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
குதிரைப்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
காலாள்படையின்தலைவமார்களும் வந்தார்கொலுமுன்னே
இப்படியராசர்களெல்லாம் இலங்குங்கொலுமுன்பில்

மகுடமணிக்குமலைபோலிருக்கு மலுக்குராசைக்கண்டு
பாதம்பணிந்துதண்டமுஞ்செய்து பண்டாய்த்தான்போற்றி
அருகினிலிருந்தராசர்களெல்லாம் அஞ்சிநடுநடுங்கி
மந்திரிமார்களுஞ்சுற்றிலுமிருந்தார் மலுக்குராசாக்கு
தந்திரிமார்களுஞ்சுற்றிலுமிருந்தார் மலுக்குராசாக்கு
அந்தவேளையிலென்னவாச்சுது ராசாக்காளுலும்
ஒருவருடனும்பேசிடவில்லை யுபர்பதிராசாவு
சஞ்சலமேன்மேலாகப்பெருகுது சண்டாளராசாக்கு
விசனமேன்மேலாகப்பொங்குது வேந்தன்ராசாவுக்கு
பொன்னையுந்நினையான் பொருளையுந்நினையான் பூமிதனைநினையான்
பெண்ணையுந்நினையான் பவிசையுந்நினையான் பெரியவிசனத்தாலே
தேசமுந்நினையானாசையுநினையான் சீமைதனையுநினையான்
செம்பொன்மணியின்சிம்மாதனத்தைச் சிந்தையுள்தானினையான்
அன்னையைநினையான் தந்தையைநினையானரும்புவிளையநினையான்
நலத்தையுநினையான் குலத்தையுநினையான் தலத்தையுந்தானினையான்
பெலத்தையுநினையான் கலத்தையுநினையான் பின்பெவையுந்நினையான்
மக்களுகம்மது அலியார்சம்பவை மனதில்தானினைப்பான்
எப்படியவர்களைகெலித்திடுவோமென இதுவேநினைப்பானும்
வாழ்வினைவிட்டுவளியினைவிட்டு வன்பகைதனைநினைத்து
தலைநோய்கொண்டாற்போலவேகையாற்றலையைப்பிடித்துக்கொண்டா
இப்படிமலுக்குராசனிருக்கிற இடஞ்சல்தனைக்கண்டு (ன்

(படைத்தலைவர்கள்சொல்லுதல்.)

மற்றுமுண்டானராசர்களெல்லா மன்னன்றனைநோக்கி
எங்களையாளும்ராசாவேநீயென்ன விதத்தாலே
இப்படிவிசனமாயிருக்கிறீரெங்களுடன்சொல்லும்
என்னவேலைகளிருந்தபோதிலு மெங்களுடன்சொல்லும்
கண்ணெறிப்பொழுதினில்செய்துமுடிப்போம் கதிர்முடிமன்னவனே
நீகாலால்காட்டினல்தடையில்லாமல் கையால்செய்திடுவோம்
மலைகளைத்தூளாயிடித்திடச்சொன்னால் மலைகளைத்தூள்செய்வோம்
நாட்டைப்பிரித்திடச்செலவுதந்தால் நொடியிலழித்திடுவோம்
கடலைக்கலக்கிடச்சொல்வாயாகில் காலால்கலக்கிடுவோம்
மலைகளைத்தூளாய்ப்பறத்திடக்கையால் வாரிப்பிசைந்திடுவோம்
உன்றன்சொல்லுக்குத்தடங்கலுமுண்டோ உனக்குஎதிரியுண்டோ
உறங்கினமுகமாயிருக்கிறகாரிய மெங்களுக்குச்சொல்லு

(இராசன்படைவீரருக்குச்சொல்லுதல்)

என்னிடபடையின்றலைவமார்களே யான்சொல்லக்கேளும்
என்னிடசேனையின்தலைவமார்களே யான்சொல்லைக்கேளும்
காதுகொடுத்தச்சந்தோஷமாகக் கவனமாக்கேளும்

நான்பிரண்டாரவாரநகைகாலம் ராசனாரவிருந்தா
ராசீகளெல்லாம்மாராசாதிபதியாய் ராச்சியமாளுண்டேன்
இதுநாள்வரைக்குமெனக்கெதிரியில்லையென்றிருந்தேன்
இந்நாளையிலெனக்குப்பகையாக ஒருவன்தானிருக்கான்
அலிபாசாகர்ஜண்டிலிருக்கையில் சதிகாரனிருக்கான்
மக்கமாநகரில்முகம்மதென்னொருவனிருக்கிறானவன்கூட
வாளலியென்றொருவீரனுமுண்டு வாள்பிடிக்கும்பயம்
தொல்வாய்ப்பலாக்கம்பேரென்றும் பூசலில்வல்லவனும்
இவர்களைவெட்டிடஎண்ணமுஞ்சம் பூமியிருக்குதுஎன்மனதில்
வேறொன்னுஞ்சகிப்புயில்லை வெட்டிப்போடுவோம்
அந்தப்பதியைப்பிடித்திடவேணு மக்கநகரைப்பிடிக்கவேணும்
மூவர்தலையுமந்நகரமும் முடிக்கவேணும்
அவர்கள்தலையைபெண்முன்பாகக் கொண்டுவந்திடவேணும்
அங்குள்ளசனங்களைச்சிறையாய்ப்பிடித்துக் கொண்டுவரவேணும்
இப்படிச்செய்தால்சகிப்புயில்லை பெண்ணமொன்றுமில்லை
இதனால்நானுஞ்சகிப்பாயிருக்கிறே னென்றான்மாமனுக்கு

(பூதராசன்சொல்லுதல்.)

அந்தச்சொல்லைக்காதிலேகேட்டு அப்போபூதராசன்
ஐயாகேளும்ராசனேகேளும் அடியேன்சொல்லுகிறேன்
அதிகப்படையினையுள்ளராசசே அதிகாரமுள்ளோன்
எதிரியில்லாமல்நீயுலகினை யாண்டாயிதனைநாளாக
உன்னைக்கெலித்திடுவார்களுமுண்டோ இந்தவுலகுதன்னில்
எதிர்த்துக்கெலித்திடுவார்களுமுண்டோ இந்தவுலகுதன்னில்
கண்ணாலுன்னைக்காண்பாராகில் கலங்கிமடிந்துபோவார்
தயிரின்குடம்போலுடைகுவரல்லது சண்டைக்குவருவாரோ
நாடுதேசங்கள்தன்னையழிக்கிறேன் நானொருவன்போதும்
மக்கமாநகலாயிடிப்பேன்தூளாய் மண்ணாய்ப்போகச்செய்வேன்
முகம்மதென்பவன்தலையினைவெட்டி முன்னம்வைத்திடுவேன்
அலியின்தலையதுதுண்டாவீழ்ந்திட அறுத்துக்கொண்டுவருவேன்
கம்பர்தலையைத்திருகியறுத்துக் கையிலெடுத்திடுவேன்
பெண்டுபிள்ளைகளைச்சிறையாய்ச்சேர்த்துப் பிடித்துவந்திடுவேன்
மலைகளைச்செந்தூளாகப்பறந்திட பொடியாய்ச்செய்திடுவேன்
ஆழ்கடல்சேறாய்ப்போகச்செய்குவேன் அண்ணல்ராசாவே
காற்றாய்ப்பறந்திடும்பேர்களைநினைத்துக் கலக்கப்படலாமோ
பஞ்சாய்ப்பறந்திடும்பேர்களைநினைத்துச் சஞ்சலப்படலாமோ
ஏழைமனிதர்கள்தன்னைநினைத்து எண்ணப்படலாமோ
சிறியகுலத்தின்பேர்களைநினைத்துச் சிந்தனைப்படலாமோ

(மலுக்குராசன்சொல்லுதல்.)

இந்தப்பேச்சைக்காதிலேகேட்டு சனங்கெட்டராசன்

கட்டிவிடக்காச்சந்தோஷமாயினான் சனத்தராசாவும்
எவ்விடபூதராசனைச்சேனும் இப்படிநீசெய்தால்
எவ்விடதேசம்பாதிதருகுவேன் என்மகளையினைப்பேன்
ஏகாக்கதிபதியாயுன்னைவைத்துநா னென்னருகினில்வைப்பேன்
சீக்கிரமாகநீசொல்லியபடியே செய்துமுடித்துவாரும்
தீவிரமாகநீசொல்லியபடியே சிரமுடித்துவாரும்
தடையில்லாமலவிடம்போய்நீ தலைகளைக்கொண்டுவாராய்
இப்படிமலுக்குமன்னவன்சொல்லிட எழுந்தான்பெரும்பூதம்
மலுக்குராசனைமென்மேல்போற்றி மன்னன்விடைவாங்கி
தன்வீடமனைக்குப்போனானப்போ சண்டாளிபூதம்

(பூதராசன்மக்கம்வருதல்.)

வீட்டுக்குப்போனான்கொடியபூதமும் வீறுமிகப்பேசி
கைகாலலம்பிப்போசன முண்ணக்கொண்டுவரவேசொன்னான்
நூறுகலமாங்கோதுமையரிசியை நொடிக்குள்சமைத்தார்கள்
ஒட்டகமுப்பதுமறுத்துசசமைத்தனர் ஒருநொடிக்குள்ளாக
எதிரில்கொண்டிவைத்தார்பூதம் எடுத்துப்பசியாறி
இருபதுபாரவாளினையெடுத்தான் பூதராசாவும்
இருபத்தநாலுபாரதண்டத்தை எடுத்துக்கையிற்பிடித்தான்
பத்துப்பார அம்பினையெடுத்துப் பிடித்தான்கைதனிலே
சக்கரஞ்சுருட்டுகத்தியையெடுத்துத் தடக்கையிற்பிடித்தான்
சந்தனமணாத்துமாரினில்பூசினான் சவ்வாதுகூட்டி
நாற்றுப்பதினொருமுழத்தலைவாங்கிய நீண்டபூதராசன்
நெடுமலைபோலராசன்முன்வந்து நின்றான்பெரும்பூதம்
பூதத்தைக்கண்டுராசாவுக்குப் பூரிப்புமாச்சு
பயமில்லாமலவர்களைவெட்டிப் பழியைவாங்கிடுவான்
ஜயமும்பெறுவானச்சமில்லாமல் சத்துருவமுளபூதம
என்றுபலபலவிதமாயெண்ணினான் இராசாமாமலுக்கு
மன்னனைப்போற்றிப்பூதராசனும் விடைதாருமென்றான்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அண்ணல்ராமலுக்கு
சந்தோஷமாகப்பூதத்தைப்பார்த்துச் சொல்லுவான்ராசன்
ஜின்னின்படைகளுடனேநீயும் போவெனவிடைகொடுத்தான்
மலுக்குராசன்சொல்லிடப்பூதம் மனதுமிகமகிழ்ந்து
வெகுகலத்தேரின்மேலேயேறினான் வீரியபூதராசன்
ஜின்னின்படைகள்சூழ்ந்திடப்பூதம் தேர்மேலேறினானே
ஆகாயமார்க்கமாகப்பறந்திடவிட்டான் தன்தேரை
காற்றைவாத்தியந்தான்மேல்முழங்கிட நடத்தினான்தேரை
காளாசிச்சரிதிண்டிமம்பம்பை தாரைகளூதிடவும்
சின்னம்பேரிகைதம்பட்டமோசைகள் செவிகளடைத்திடவே
செக்கனெழுந்தசூரியன்வெயிலைச் சோமறைத்திடவே
கருத்தெழுந்துபோனதுவானின் கதிரைமறைத்திடவே

ஆதிபுலிக்குறிக்கவேளையிலனல்போல்சாமாச்
அவருக்குச்சோர்வில்லாமல்போனதே அச்சமொன்றுமில்லை
அந்தவேளையில்நபியுல்லாவும் அஸ்ஹாபுமார்களையும்
சிங்கமதாகியபூபார்களையுந் திருமுன்றானழைத்து
எங்கள்யார்களேஅஸ்ஹாபுமார்களே யான்சொல்லக்கேளும்
இனின்பெரும்புலியாகியபேர்களே சொல்லுவினிகேளும்
இபுறுகீமஅஸ்காபுடன்ஜின்னும் அரசன்மலுக்கிடத்தில்
சேதிகள்சொல்லிடக்கொடியவன்கேட்டுத் திரளாய்ப்படைகூட்டி
சண்டைக்கனுப்பினனம்மைக்கெலித்திடச் சண்டாளிபாவி
ஜின்னிக்கூடப்பூதாசனும் தேர்மேல்தானேறி
நம்மிடபட்டணம்வந்திறங்கினர் நாயன்முனிவானோர்
சிங்கஆலிக்குறிக்கோரவேளையில் தீபோல்தான்காயும்
சொல்லிடமுடியாச்சாமதுவீசது சிறந்தஅலிப்புலிக்கு
பொல்லாப்பூதப்படைகளைக்கண்டு பயந்துவிருந்தாக்கால்
பூதஜீப்ஜினகளும்நம்மிடபட்டணம் வந்துபுகுந்திடுவார்
ஆகையால்நாமுமெதிர்த்திடவேணும் அவர்கள்பயந்தோட
அல்லாறகுமத்துநம்மேலுண்டு அணுவும்பிசகாது
வெற்றிநமக்குக்கொடுப்பானையன் வேதநெறியோரே
அந்தப்படைமுன்போறவர்யாரோ அறியச்சொல்லிடுவீர்
அந்தச்சொல்லைக்காதிலேகேட்டு அபூபக்கர்சித்தீகு
வேதக்கடலில்வெற்றியுள்ளோரே எனதுமுகம்மதரே
அந்தப்படைக்கென்னையனுப்பிடும் அண்ணல்நயினாரே
வெற்றிபெற்றுநான்வருகிறேனென்று விளம்பிட அந்நேரம்
கீர்த்தரித்தஉமறுமெழுந்து நெடியோனன்னபியே
மேகக்குடையிடவாடைமணத்திடும் வெற்றிநயினாரே
என்னையனுப்பிடிப்படையைவென்றிட என்றுமொழிந்ததற்பின்
ஆதிஅரசினிலேறியேபேசிய அண்ணல்நயினாரோ
மான்பின்னேகஆற்றைக்கடந்த அகம்மதுநன்னபியே
பூதப்படைமேலென்னையனுப்பிடும் போறேன்சண்டைக்கு
பொடிபொடிசெய்துவருவேனவர்களை பெரியோன்றிருத்தூதே
இப்படியார்கள்மூவருஞ்சொல்லிட யிடிபோல்சத்தமிட்டே
ஆதியின்றூதேமுகம்மதுநயினே அண்ணல்நயினாரே
பொல்லாப்பூதப்படைகளைவென்றிட பெரியோனுதவியோடு
தங்கள்துவாவின்வரிசையுமானால் சையதிராலே
எந்தகடலைப்போல்படைகள்வந்தாலு மெனக்குப்பெரிதல்ல

செந்தாளெழுந்துபறந்திடச்செய்வேன் சேனைகளத்தனையும்
அடியேன்றனக்குவிடைநீர்தந்தால் அல்லாஅருளாலே
வெற்றிபெற்றுநான்வருவேனென்றார் வீரியமூசாவும்

(மூசாபூதப்படைபோகுதல்.)

அந்தசொல்லைகாதிலேகேட்டு அகம்மதுநபியுல்லா
சிந்தைமகிழ்ந்துமூசாவைப்பார்த்து சொன்னாநபியுல்லா
பூதப்படைகளைவென்றிடவுனக்கு பெரியோன்கிருபைசெய்வான்
ஜின்னின்படைகளைவென்றிடவுனக்கு தூயோனுதவிசெய்வான்
ஆயிரம்அஸ்ஹாபிமார்களைகூட்டி அரிபோல்சண்டைசெய்ய
போய்நீர்வாருமென்றுசொல்லினா பெரியோனபியுல்லா
அந்தசொல்லைகாதிலேகேட்டு அன்னலரிமூசா
சந்தோஷமாகவீட்டுக்குப்போனா சந்திரமுகமூசா
போசனமுண்டுபூரிப்பாயினார் பெரியபுலிமூசா
சந்தனம்பன்னீர்சவ்வாதணிந்தார் சமத்தர்மதிமூசா
கத்தியையெடுத்துக்கையிற்பிடித்தார் கனத்தபுலிமூசா
அம்பையெடுத்துதோளில்போட்டார் ஆங்காரமூசா
ஈட்டியேயெடுத்துகையில்பிடித்தார் எங்கள்திருமூசா
பலபலசண்டையினாயுதமெல்லாம் பூட்டினார்ப்போது
சிங்கம்போலவேவெளியினில்வந்தார் சிறந்தபெருமூசா
குதிரையின்மேலேறினார்வெற்றிக்கொண்டிடவலிமூசா
மற்றஅஸ்ஹாபிமார்களுந்தங்கள் மனையினிடம்புகுந்து
அன்னமருந்திஆயுதமணிந்து ஆங்காரங்கொண்டு
அவரவர்தங்கள்குதிரைகளேறி ஆணவமிகபேசி
மூசாவிடத்திற்குவந்தாரெல்லா மேன்மையுள்ளவீரர்
வந்தபேர்களைகண்ணுறக்கண்டு வல்லபெருமூசா
சந்தோஷமாச்சுதுமூசாவிற்கு சண்டைக்கித்தான்போக
அந்தவேளையில்மூசாவோடு அஸ்ஹாபிமார்கூடி
சந்திரன்பேசியநபியுல்லாமுன் தாங்கள்வந்துநின்றார்
வந்தபேர்களைநபியுங்கண்டு மனதுமகிழ்வாகி
என்றன்அஸ்ஹாபிமார்களேகேளும் இறையோனருளாலே
வந்திடும்பூதகணங்களைவென்றிட வல்லபெரியநாயன்
உதவியுஞ்செய்வோனுங்களுக்கென்று உற்றதுவாச்செய்து
எல்லாஜயமும்பெறுவீரென்று இறசூல்நயினாரும்
வெற்றியுங்களுக்காண்டவன்தருவான் வேதநெறியோரே
பூதப்படையைவென்றிடப்போங்கள் பெரியோனருளாலே
பலபலவிதமாநபியுல்லாவும் பகர்ந்துவிடைகொடுத்தார்
அந்தமொழியேகாதிலேகேட்டு அஸ்ஹாபிமாரெல்லாம்
ஆதிநபியின்பாதம்பணிந்து அப்போகுதிரையேறி
பட்டணங்கள்வீதியேவிட்டு வலியபுலிபோல

கலகலவென்று ஆயுதந்தாங்கிட கடினப்புரவியேறி
விட்டார்குதிரைகளெல்லாம்நடந்திட வேகமிகக்கொண்டு
வேடிக்கையாகநடந்தாரெல்லாம் வெள்ளக்கடல்போல
வீதிவீதியாய்த்தாண்டிப்போயினார் வேதக்கடலானோர்
பக்கத்தைவிட்டுவெளியேவந்தார வல்லமைமிகப்பேசி
செந்தாளப்பறந்திட குதிரையையாடத்தினார் சிங்கத்திரள்போல
கருந்தாள்பறந்திட குதிரையைநடத்தினார் கருத்தப்புலிபோல
ஆறுகுளங்களைத்தாண்டிநடந்தார் ஆறுலக்ஷமுள்ளவீரர்
ஏரிவனங்களைத்தாண்டிநடந்தார் இலைதழையோலைகளாலே
பல்பலவாத்தியமேளமுழங்கிட பதாதிதாகடத்தி
தோப்பினருகில்வந்தாரெல்லாம் துணிந்துமனங்கொண்டு
கருத்தமலைபோலிருந்திடக்கண்டார் கனத்தபூதங்களை
பெரியபெரியமலைபோற்கண்டார் பெருத்தபூதங்களை
கண்ணுறக்கண்டு அல்ஹுப்மார்கள் கலக்கமிகவாகி
இப்படிப்பட்டபடைப்பானோர்களை கண்டோமில்லைநாமும்
என்றுபயந்துநடுங்கினாரெல்லாம்ஏக்கமிகவாகி
அந்தவேளையில்பூதப்படையோர் ஆங்காரங்கொண்டு
வந்தஅல்ஹுப்மார்களைக்கண்டு வாரியெழுந்திடவும்
அப்போபூதராஜனவர்களை அதட்டிமிகமுனிந்து
சுகமாயிருங்களென்றுசொல்லினான் சிங்கபூதராஜன்
அந்தவேளையில்பூதராஜனும் ஆங்காரங்கொண்டு
அண்ணலதிபதிமூசாவென்னு பாசர்முகநோக்கி
புலிமுன்னாடிபோலென்முன்னாகப் போரிடவந்தீர்கள்
பூனைமுன்னெலிபோலென்முன்னாகப் போரிடவந்தீர்கள்
நல்லதுநல்லதுஉன்பேரென்ன நானறியச்சொல்லும்
சின்னமலிதாகுலத்திலுதித்த தீரனேசொல்லென்றான்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அண்ணல்புலிமூசா
மனமஞ்சாமல்பூதத்தைப்பார்த்து மன்னர்புலிமூசா
சொல்லிடக்கேளுபூதராஜனே சேதிசொல்லுகிறேன்
உன்றனைவெட்டிநரகுக்கனுப்பிட உடையோனபியிறசூல்
என்னையனுப்பினார் என்றன்பேராயான்சொல்லக்கேளு
தானிலமஞ்சிட வெட்டும் அலிப்புலிசாவென்றுசொன்னார்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போபூதராசன்
கலகலவென்றுசிரித்தானையா கனத்தபூதராசன்
கைகளைப்புஜக்கின்மேல்வைத்துசிரித்தான் கனத்தபூதராஜன்
குலுங்கிக்குலுங்கிசிரித்தானப்போ கொடியபூதராஜன்
என்னைஜெயித்திடவுன்னாலாகுமா வேளைகுலத்தானே
என்றுசொல்லிடக்கேட்டப்போது அல்ஹுப்மாரெல்லாம்
அம்புகள்விட்டார்மேன்மேலாக அரியமழைபோல
அந்தவேளையிலென்னசெய்தான் பூதராசாவும்
கண்கள்சிவந்துபோச்சுதப்போது பூதராஜனுக்கு
பல்லைநெறநெறவென்றுகடித்து பூதராசாவும்

தண்டாயுதத்தைக்கையிலெடுத்தான் சண்டாளிபூதம்
ஓங்கியோரடியடித்தானப்போ வாணிஇடிபோல
அந்தவடியினால்மாண்டுபோயினார் அன்பது அஸ்காப்கள்
பின்னுமடித்திட தண்டாயுதத்தைப் பிடித்தான் கைனாலே
அந்தவேளை பில்மூசார்வென்பேர் அவன்முகந்தனையபார்த்து
கிலுகிலுவென்றுசிரித்தாரப்போ கொஞ்சமுமஞ்சாமல்
சிரித்ததைக்கண்டுபூராஜனும் செய்திதானறிய
அடித்திடவெடுத்ததண்டாயுதத்தை அப்போபூதராசன்
பூமியின்மேலேகனத்தைவைத்து பூதராசாவும்
பண்ணர்மூசாதன்முகம்பார்த்து மகாக்கொடியபூதம்
சண்டைகளத்தில்என்முன்னாக சற்றுமஞ்சாமல்
என்னவிதத்தால்சிரித்தாய்ச்சொல்லிடு ஏளைகுலத்தானே
நான்றுஞ்செய்யேனினிமேலுன்னை யென்னுடன்சொல்லென்றான்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அண்ணல்வலிமூசா
கேளடாபூதராசாவேநீ கொஞ்சமாச்சொல்லுகிறேன்
பஞ்சைகளென்றுஎங்களையின்று பாரதண்டத்தால்
அடித்தாயெங்களைநல்லதுநல்லது ஆனாலாகட்டும்
அதனாலெங்களுக்கொன்றுமில்லைகேள் அடாபூதராசே
இன்றுஎங்களையெப்படி அடித்தாய் அந்தப்பழிவாங்க
நாளையெங்கள் அலிபுலிவருவார் நானென்னசொல்வேன்
அலியார்வருவார்வந்தால்நீங்கள் அவருடைகையாலே
என்னபாடுகளாகுமோவென்று எண்ணிநான்சிரித்தேன்
நீங்களென்னசெய்வீரோவென்று எண்ணிநான்சிரித்தேன்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போபூதராசன்
கிலுகிலுவென்றுசிரித்தானப்போ பூதராசாவும்
குலுங்கிகுலுங்கிசிரித்தானப்போ பூதராசாவும்
அண்ணல்மூசாமுகத்தைப்பார்த்து அப்போபூதராசன்
நீ அலியென்றுசொன்னையெனக்குநீ அலிபுலியல்லவடா
உன்னையல்லாமல்வேறேயொருவ ரிருக்கிறார் அலியாரும்
அவனைவெட்டிடவந்தேனல்லது உன்னைவெட்டமாட்டேன்
தலையறுக்கவந்தேனல்லது சண்டைக்களமுன்னால்
உங்களையினிமேலொன்றுஞ்செய்யேன் என்றான்ராசாவும்
எனக்குப்பகைபன் அலியல்லாமல் வேறுபாருமில்லை
அவனைதிர்த்துவெட்டிகெலித்து அவனைக்கொன்றிடுவேன்
அதன்பின்னுங்களைவெட்டிமடிப்பேன் அலிதான் சக்க
ஆனாலாகட்டுமினிமேலுங்களை யடிப்பதில்லையென்றான்
மிஞ்சியஅஸ்காப்மார்களையெல்லாம் விருப்பபெரும்பூதம்
காலுக்குவிலங்குகள்போட்டான்சேர்த்து கனத்தகொடியபூதம்
அஞ்சிடயெல்லார்தம்மைசேர்த்தான் அண்ணல்பெரும்பூதம்
நம்மைகெலிப்போரில்லையென்றெண்ணி நாகாருர்பூதம்
பூதப்படைகளெல்லாஞ்சேர்த்து பெரியகொடியபூதம்
என்படை வீராகுராரோயின்று யான்சொல்லக்கேளுரே

இனிமேலிவ்விடமிருந்திடில்நமக்கு எதிரியாருமில்லை
இவ்விடம்விட்டுநாம்போவோமென்றான் இராசபெரும்பூதம்
அந்தசொல்லைகாதிலேகேட்டு பூதப்படையோர்கள்
அய்யாவுன் தன் இஷ்டப்படியே ஆகட்டுமென்றார்கள்
அந்தவார்த்தையைகாதிலேகேட்டு அப்போபூதராசன்
தேர்மேலேறினான்சீக்கிரமாக சேனைப்படைசூழ
அந்தத்தோப்பைவிட்டெழுந்து அஸ்காப்மாரோடு
காலில்போட்டவிலங்குடன்சேர்ந்துக் கடல்போல்தானெழுந்து
வல்லஉமர்கத்தாபின்தோப்பினுள் வந்துஇறங்கினார்கள்

(கபிநாயகத்துக்குத்தூதுவிடுதல்.)

அந்ததோப்பினுள்வந்ததின்பின்பு என்னநடக்குதுபார்
விலங்குகள்போட்ட அஸ்காப்மார்களி லொருவர்தனையழைத்து
காலில்போட்டவிலங்கையொடித்தான் கருத்தபூதராசன்
எதிரிலவனைநிருத்திவைத்தவன் என்னசொல்கிறான்பார்
கோடையிடிபோல்பேசினானய்யா கொடியராசபூதம்
கிடுகிடுவென்றுநடுங்கிடபேசினான் கெட்டபூதராசன்
சின்னமனிதனேநானொருசேதி சொல்கிறேனீகேளு
பஞ்சைமனிதனேநானொருசேதி பகர்வேனீகேளு
கெட்டிக்காரர்களாகவிருந்தால் எதிரில்வரச்சொல்லு
சிப்பாய்மாரானாகவிருந்தால் திருமுன்வரச்சொல்லு
சேவகப்பாடியாகவிருந்தால் சண்டைக்குவரச்சொல்லு
மீசைமுளைத்தஆணாயிருந்தால் முன்னேவரச்சொல்லு
பேடியேபோலவிருப்பானாகில் பேசாதிருக்கச்சொல்லு
உயிருக்குஅஞ்சிடும்பேடியேயானால் ஓடிபிழைக்கச்சொல்லு
சத்துவமுள்ளவீரனேயாகில் சண்டைக்குவரச்சொல்லு
அப்படிசண்டைக்குவராமல்போனால் அங்கேநான்வருவேன்
கோட்டைகளெல்லாம்தூளாய்ப்பறக்க இடித்துப்போடுவேன்காண்
நாட்டைப்பிடித்துநாசம்பண்ணுவேன் நன்றாய்நீசொல்லு
கொஞ்சமும்நஞ்சேனுங்களைவெட்டிட கோட்டைதனைபிடிப்பேன்
பெண்பிள்ளைகளைசிறையாய்ப்பிடிப்பேன் போருக்குவரச்சொல்லு
சண்டைச்செய்திட அலியார்தன்னை சீக்கிரம்வரச்சொல்லு
வாயால்வந்தபடியெல்லாஞ்சொன்னான் வன்னிபுதுப்பூதம்
தனக்குவருவதையறியாபூதம் சண்டைக்குவரச்சொன்னான்
சீக்கிரமாநீபோய்ச்சொல்லென்று சொன்னான்பெரும்பூதம்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அஸ்காப்போது
புலிவாய்மீண்டஆட்டுபோல பொழிலைவிட்டுவந்தார்
நரிவாய்மீண்டகோழியைப்போலதோப்பைநீங்கிவந்தார்
பாம்பிடமீண்டதேரையைப்போல பாடுபட்டுவந்தார்
ஓரோட்டமாமக்கத்தைநாடி ஓடிஓடிவந்தார்

பள்ளம்விழுகும்நீரதுபோல பதறிஓடிவந்தார்
விட்டிடும்அம்புபோலபறந்து விழுந்தோடிவந்தார்
பறவையைப்போலவேகமெடுத்து பறந்துஓடிவந்தார்
முத்துப்போலவேர்வைகள்சிந்திட முழுகியோடிவந்தார்
மக்கமபுகுந்துபள்ளியணுகி முகம்மதர்தனைப்பார்த்து
ஆதியின்னொளியேஅகம்மதநபியே அல்லாத்திருத்தூதே
வேதக்கடலேநூறுதவிளக்கே வேதாம்பரநபியே
என்னசொல்வேனேதுசொல்வே னிறசூல்நயினாரே
சொல்லிடஎனக்குநாவும்வரவில்லை தூயநாயகமே
வாயுங்குளறுதுவல்லையேயெச்சில் வல்லோன்திருத்தூதே
கண்டால்தெரிந்திடுமவர்களின்படைப்பை காசீமுகம்மதே
இருண்டமலைபோலிருக்கிறதெல்லாம் இறசூல்நன்னபியே
கறுத்தமலைபோலிருக்கிறதெல்லாம் கல்விக்கடலாரே
பூதப்படைகளெல்லாம்சின்படை பெரியோன்திருவொளியே
அவர்களைவென்றிடநம்மாலாகுமா அல்லாதிருத்தூதே
மனிதராலவர்களைவெல்லமுடியுமா மாறாப்பேரொளியே
எளியமனிதராஎதிரியாகுவார் எங்கள்நயினாரே
தங்கள்சொற்படிமூசாவுடனே தண்டுபெரிதாக
தோப்பின்கிட்டேபோய்நாம்பார்த்தோம் தேரொடுபூதங்களை
கண்டவுடனேகைகாலெல்லாம் நடுங்கிக்கலக்கமாச்சு
தயிரியஞ்செய்துதோப்பினுள்புகுந்தோம் தடையொன்றில்லாமல்
அங்கேபோய்ப்பின்பார்த்தோம் அங்கோராங்காரபூதம்
பூதத்துக்கெல்லாம்ராசபூதனு யிருந்தானொருபூதம்
எங்களைப்பார்த்தவுடனேயவனு மெழுந்தான்மலைபோல
எழுபதுபாரதண்டாயுதத்தை யெடுத்தான்கைதனிலே
அந்தவேளையில்நாங்களெல்லோரும் அம்பைக்கையிலெடுத்து
மழைபெய்வதுபோல்போட்டோமவன்மேல் மட்டிடமுடியாமல்
அந்தவேளையில்பூதராசனு மூசாதனைப்பார்த்து
ஆனுவமாகஎன்முன்வந்தா யார்நீசொல்லென்றான்
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு அப்போலமூசா
உன்றனைவெட்டிக்கெலிக்கிடவந்த உற்றபுலியலிகான்
நாருக்குன்னையனுப்பிடவந்த நார்புலியலியென்றார்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போதுபூதராசன்
தண்டாயுதத்தைக்கையிலேயெடுத்தான் சாயர்த்திடமாக
கண்களிரண்டும்சிவந்துபோச்சுது கனத்தராசாக்கு
மீசைபடபடவென்றுதுடித்தது பூதராசாக்கு
பல்லைநெறநெறவென்றுகடித்தான் பூதராசாவும்
தண்டாயுதத்தாலடித்தானோடி சண்டைகள்முன்னாலே
அந்தஅடியினுலெண்பதுஅஸ் ஹாப்மார்கள்மாண்டுபோனார்
பின்னுமடித்திடத்தண்டாயுதத்தை யெடுத்தான்பெரும்பூதம்
அந்தவேளையில்மூசாவென்போர் அவனுடமுகம்பார்த்து
கிலுகிலுவென்றுசிரித்தானந்த பூதராசன்முன்னே

அந்தவேளையில்பூதராசனு மடித்திடமேற்கொண்டமனத
சேர்ந்தவேவிட்டான்பூமியின்மேலே சிங்கப்பெரும்பூதம்
என்னவிதத்தால்இறந்ததென்றான் மூசாமுகம்பார்த்து
சண்டைகளத்தில்சிரித்தவிதத்தை சீக்கிரமாய்சொல்லு
இனிமேலுங்களையடிக்கேன் சொல்லிடுவென்றான் பெரும்பூதம்
அந்தவார்த்தைதனைக்காதிலேகேட்டு அப்போதுமூசா
கொடியபாதகபூதத்தைப்பார்த்துக்கொஞ்சமும்அஞ்சாமல்
காலை அலிபார்வருவாருன்னிடம் என்னைநீபடுவாயோ
அந்தவிதங்களையெண்ணிநான்சிரித்தேன் படுபாவியென்றார்
அந்தச்சேதியைக்காதிலேகேட்டு அப்போபெரும்பூதம்
கைகள்காலுந்துவிலங்குகள்போட்டான் ஒன்றுஞ்செய்யாமல்

(அபூபக்கர்சித்திகுத்தோப்பிற்குவருதல்.)

அபூபக்கர்சித்திகுத்தோப்பினைவிட்டு அன்றுபெரும்பூதம்
பூதப்படைகள்தங்களைச்சேர்த்துப் பெரியமலைபோல
ஏகங்களைச்சிறையிலடைத்துவிட்டான் இறசூல்நபியினரே,
வெங்களத்தேர்மேலேறியேபூதம் வெள்ளப்படையோடு
தோப்பதைவிட்டுஉமர்கத்தாபின் தோப்புக்குள்வந்தார்கள்
அந்தத்தோப்பிறுனொன்றனையடைத்து அப்போபூதராசன்
காலில்போட்டவிலங்கையொடித்தான் கனத்தபூதராசன்
சேதிகளெல்லாஞ்சொல்ல அனுப்பினான் சிங்கபூதராசன்
அலிபாதன்னைவந்திடச்சொன்னான் அரியசண்டைசெய்ய
அந்தசேதிகளெல்லாஞ்சொன்னான் சருகார்நபிமுன்னே

(நபிநாயகமுறுதிசொல்லுதல்.)

சொன்னசேதிகளெல்லாங்கேட்டுத் நாயநபியுல்லா
என்றன்அஸ்ஹாப்மார்களேகேளும் இப்போதானதெல்லாம்
ஆண்டவனிட்டகட்டளைப்படியே ஆகிடும்பூமியிலே
சும்மாவொன்றுமாகாதென்றார் முகம்மதுநபியுல்லா
அந்தச்சேதியைக்காதிலேகேட்டு அஸ்ஹாப்மாரெல்லாம்
இறந்துபோனபேர்களைநினைத்து எண்ணமிகவானார்
மாண்டுபோனபேர்களைநினைத்துச் சஞ்சலமிகவானார்
முகங்கள்வாடியேபோச்சதெல்லோர்க்கும் விசனமேபெரிதானார்
அந்தவேளையில்பொழுதும்போச்சுது அப்போநபியுல்லா
மகரிபுதொழுகையைத்தொழுதார் வல்லநபியுல்லா
அஸ்ஹாப்மார்களெல்லாருங்கூடி அன்றுதொழுதுகொண்டார்
அஸ்ஹாப்மார்கள்முகத்தைப்பார்த்து அப்போநபியுல்லா
என்றன்அஸ்ஹாப்மார்களேகேளும் எல்லாரும்நீங்கள்
பொழுதுவிடிந்தவுடனேவாங்கள் போங்கள்மனைக்கென்றார்
அந்தச்சொல்லைக்காதிலேகேட்டு அஸ்ஹாப்மாரெல்லாம்

பாதம்பணிந்து போனதெல்லாம் அவரவர் தன்வீடு
பேகம்குடையின நபியுலவாவும் போனார் தன்வீடு
வாடைபணக்கநபியுல்லாவும் வந்தார் தன்வீடு
உண்டுகுடித்துத் தூங்கினதெல்லா மூலகமுறங்கிப்போச்சு
சகலபடைப்புகளுஞ் சிந்தினையாயின சந்தடியில்லாமல்
அந்தவேளையில் நபியுல்லாவும் சிந்தினையானார்கள்
அப்ப ஜிபுரீல் இறங்கியேவந்தார் அகம்மதுநபியிடத்தில்
நபிகளுக்கெல்லாம் நபியாய்வந்த நாயகன்வசமே
ஆதிசலாமுமக்குச் சொன்னான் அகம்மதுநன்னபியே
சோதியொளிவிளக்கித்த நபியே சேதிசொல்லக்கேளு
ஷேர்ப்படையினில் மாண்டபேர்களைப் போற்றிவாழ்த்தி
நாதகன் தொழுது அடக்கமுஞ் செய்தோம் வல்லநபியே
அவர்களிதினை தனுர்சஞ்சலமென்னும் அகத்தில் செய்யவேண்டாம்
அவர்களெல்லாம் சுவர்க்கம்புகுந்தார் அழகுபதியோல
இன்னம்பெரியசண்டைகளாக்கும் இறசூல்நபியினரே
பெரியசண்டைகளாகிமுடிந்திடும் போர்க்களத்திருந்தாதே
வல்ஹஜியுவாவில் சொல்லிப்போயினர் இறசூல்நபிதனக்கு
அந்தவேளையில் வருவேளைய மாசந்து அப்போது
நாயனேவணங்கநபியுல்லாவும் நடந்தார் பள்ளிக்கு
அஸ்காப்மார்களெல்லாம் வந்தார் அகம்மதுகிட்டே
மூன்றுபேர்களும் வந்துகூடினர் முகம்மதுநபிகிட்டே
எல்லாங்கூடித்தொழுதுமுடிந்தது இறையோன்தன்வணக்கம்
துவாவும்பாத்திகாவுமோதி தொழுகைமுடித்தார்கள்
அந்தவேளையில் நபியுல்லாவும் அஸ்காபமார்களையும்
பார்த்தொருசேதிசொல்லிடக்கேளும் பாங்கானபேரே
நல்லசேதிகாண் சொல்லிடக்கேளும் நாயனருளாலே
சந்தோஷமானசேதியைச் சொல்லுகிறேன் சதுரின்முன்பாக
என்னிடமாக ஜிபுரீலந்தாரு இறங்கும்வேளையிலே
சலாமுஞ்சொல்லிச்சேதிகளெல்லாம் சொன்னானென்னோடே
ஆகையானுலகினிலுள்ளோரெல்லாம் அழிந்துமடிந்துபோவார்
உலகினில்லாவுத்தில்லாதபேர்களும் ஒருவருந்தானில்லை
இன்றைக்கிருப்பவர் நாளைக்கிருப்பது நாயனறிவான்காண்
எத்தனைபோக [illegible] போனவ ரிந்தவுலகத்தைவிட்டு
நமக்குப்பூமிசதமேயில்லை நாமும்போகவேணும்
சஞ்சலமனதினில் வைத்திடவேண்டாம் சலாமத்துள்ளோரே
இப்படி நானுவிதமாகவுரைத்து இறசூல்நபிசொல்லி
இப்போபடைக்குப்போகவரியாரோ வெனக்குச்சொல்லுமென்றார்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அஸ்காப்மார்களிலே
திரமுஞ்சூரமுமிகுந்தவராகிய ஷம்ஷுதீனென்போர்
ஆதிஅரசின்மேலேதிப்பின்வந்த அகம்மதுநபியினரே
நபிகளுக்கெல்லாம்பாதுஷாவாகிய நாயகவசனியே
அடியேன் சண்டைக்குப்போகிறேனென்னை யிப்போதனுப்பிடுவீர்

வெட்டிக்கெலித்துநான்வருகிறேனென்றார் வேந்தர்ஷம்ஷதீன்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போநபியுல்லா
சண்டைக்குப்போகவுந்தன்கூட நாலாயிரம்பேரை
கூட்டிப்போருக்குப்பூதப்படையைக் கொன்றுஜெயித்திட்டுவே
வீட்டுக்குப்போயெல்லோரும்வாவென விடையுநபிகொடுத்தார்

(ஷம்சதீன்பூதப்படைபோகுதல்)

அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு அப்போதெல்லோரும்
சந்தோஷமாகவீட்டுக்குப்போயினார் சண்டைக்குத்தான்போக
போசனமுண்டுதண்ணீர்குடித்துப் பூரித்தெல்லோரும்
சந்தனம்பன்னீர்வாடைகள்பூசிச் சவ்வாதுதானணிந்து
புஷ்பமாலைகளதோள்களிலிட்டுப் பூரிப்பாயெல்லோரும்
கத்திகளெடுத்துக்கைகளில்பிடித்தார் கனத்தபுலிபோலே
ஈட்டிகளெடுத்துக்கையில்பிடித்தார் எங்குநடுநடுங்க
பட்டாகத்திகளெடுத்தாரெல்லாம் பளபளவெனமின்ன
தண்டாயுதங்களெடுத்தாரெல்லாம் சண்டைகளம்போக
குதிரைமேலேறிவந்தாரெல்லாம் கிடுகிடுவென்றசைய
நபியுல்லாமுன்வந்துநின்றார்கள் வல்லபுலிபோல
வந்திடும்பேர்களைக்கண்ணுற்றுக்கண்டு வல்லநபியுல்லா
அல்லாஹுவில்பாரஞ்சாட்டினர் அகம்மதுநபியுல்லா
என்றன்அஸ்காப்மார்களேநீங்க ளின்றுபூதப்படை
வெற்றிபெற்றுவாருங்களென்று வாழ்த்திவிடைகொடுத்தார்
போயெல்லோரும்வாருங்களென்று போற்றிவிடைகொடுத்தார்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அஸ்காப்மாரெல்லாம்
சந்தோஷமகிழ்ந்துநபியுல்லாமுன் தீன்தீனெனப்போற்றி
பாதம்பணிந்துபூதப்படைமேல் போனாரெல்லோரும்
வீதிகளெல்லாம்விட்டுநடந்தார் வேங்கைப்புலிபோல
மாடங்களெல்லாம்விட்டுநடந்தார் வலியபுலிபோல
மக்கத்தைவிட்டுவெளியேவந்தனர் மண்டூள்தானெழும்ப
காந்தமடவிகளெல்லாநடந்தார் ஏகப்படையாக.
பொழுதைமறைத்துமண்டூள்சூழ்ந்தது புரவிகாலாலே
செந்தூள்பறந்துபோச்சுதேயெட்டுத் திசையுந்தெரியாமல்
கலகலவென்று ஆயுதமெல்லாம் கனத்தவோசையிட
படபடவென்றுநடந்ததுகுதிரைகள் பாய்ந்துவோட்டமாக
தடதடவென்றுநடந்ததுகுதிரைகள் தடங்கலில்லாமல்
உமர்கத்தாபின்தோப்பின்கிட்டே போனாரெல்லோரும்
தோப்புகள்நிறையப்பூதக்கூட்டங்கள் திரிகிறார்மலைபோலே
பூதப்படைகளைக்கண்ணுற்றுக்கண்டனர் பெரியமலைபோல
மனிதர்படைகள்வந்திடக்கண்டார் வலியபூதங்கள்
அந்தவேளையில்பூதராசனும் ஆணுவமிகப்பேசி
வந்தபடைகளைக்கண்ணுற்றுக்கண்டு பூதராசனப்போ-

வாரிபோலெழுந்தபூதப்படைகளை வாகாய்த்தான்பார்த்து
சண்டைகள்செய்திடவேண்டாம்நீங்கள் சும்மாதானிருங்கள்
கொஞ்சம்பேச்சுகள்பேசிடவேணும் கொடியபூதங்களே
என்றுசொல்லினன்பூதராசனும ஒன்றுக்குமஞ்சாமல்
வீரஷம்ஷதீன்குரானாம்நோக்கி வாளினிடிபோல
சண்டைக்கிவந்தவலியாசொல்லு சாமார்த்தியமாக
என்னைஜெயித்திடவந்தவலியார் உன்பேர்தனைச்சொல்லு
அந்தசொல்லைகாதினில்கேட்டு அப்போசம்ஷதீன்
உன்னையுமுன்குலபூதப்படைகளை ஒருவெட்டால்மாய்க்க
வந்தஅலிப்புலிநானெனசொன்னார் வல்லசம்ஷதீன்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போபூதராசன்
நல்லதுநல்லதாகட்டுமென்று நகைத்தானிடிபோல
முன்னைபொருததன் அலியெனவந்தான் மூர்க்கமிகபேசி
பின்னும்அலியெனவந்தானிவனும் பெரியசண்டைசெய்ய
வந்தானென்றுமனதினிலெண்ணி வலியகொடியபூதம்
கிலுகிலுவென்றுசிரித்தானப்போ கொடியராசபூதம்
அண்ணல்ஷம்ஷதீன்தன்முகம்பார்த்து அப்போராஜபூதம்
என்னுடனெதிர்க்கவந்தவனுக்கு என்னைவணங்கென்றான்
பூனையையெலிகள்வெல்லுமாசொல்லடா பயித்தியக்காரா நீ
புலியையாடுகள்ஜெயிக்குமாசொல்லடா பயித்தியக்காரா நீ
பாம்பைதேளைகள்வெல்லுமாசொல்லடா பயித்தியக்காரா நீ
இப்படிசொல்லிசிரித்தானய்யா பூதராசாவும்
அந்தவேளையில்சம்ஷதீனுக்கு ஆங்காரமூண்டு
பூதப்படைமேல்விட்டாரம்புகள் பெரியமழைபோல
மண்ணும்விண்ணுந்தெரியாபோச்சுது விட்டஅம்பாலே
அந்தவேளையில்கோபமூண்டது பூதராசாக்கு
கண்கள்ரெண்டும்சிவந்துபோச்சுது கனத்தராசாக்கு
பல்லைநெறநெறவென்றுகடித்தான் பூதராசாவும்
எழுந்துபாரதண்டமெடுத்தான் பூதராசாவும்
ஆங்காரங்கொண்டோங்கியடித்தான் பூதராஜாவும்
வீரியமாகபத்தடியடித்தான் பூதராசாவும்
அந்தஅடியால்ஆயிரம்பேர்கள் அல்லாபுறஞ்சேர்ந்தார்
சம்ஷதீன்கூடஆயிரம்பெயருஷகிதாயமாண்டார்கள
பின்னுமடித்திடதண்டாயுதத்தை யெடுத்தான்கைதனிலே
அந்தவேளையிலதிலோர்அசுகாப் கிலுகிலுவெனசிரித்தார்
சிரித்ததைக்கண்டுபூதராசனுந் திகைத்துநின்றுவிட்டான்
கையிலெடுத்ததண்டாயுதத்தை கீழேபோட்டுவிட்டு
என்னவிதத்தால்சிரித்தாயின்று ஏழைமனிதனே நீ
சண்டைகளத்திற்சிரித்தவிதத்தை சொல்லிடுஎன்றனுக்கு
ஆர்கள்போலவந்தவனோநீ சொல்லிடுஇவ்வேளை
என்னகாரணத்தாலேசிரித்தாயிப்போதுச்சொல்லு

இனிமேலுங்களையடிக்கிறதில்லை என்னுடன்சொல்லென்றான்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போதசுகாபு
காருக்கிறையர்ப்புகுந்திதில்கொடியபூதராசாவே
சொல்லிடகேளுவென்றன்மொழியே பூதராசாவே
கல்லுங்கனாந்திடுமெல்லாம்நடுங்கிடும் பூதராசாவே
எங்களையின்றுநீவல்லமையோடு அடித்தாய்வலிபேசி
ஆயிரம்பேர்கள்மாண்டிட அடித்தா யாங்காரங்கொண்டு
கெட்டிக்காரனானென்றுநீயெண்ணினாய் கேடுக்கெடுவோனே
பின்னால்வருவதையறியாய்ப்போயினாய் பேடியானவனே
எங்களையடித்தப்பழியேவாங்கிட எங்கள்புலியாரும்
தானைப்படையில்வருவாரிங்கேநானென்னசொல்வேன்
வருவாராகிலுன்னுடகெதியு மெப்படியாகிடுமோ
பாடுகளெண்ணப்படுவாயோநீ பாதகராசாவே
ஆணவமெல்லாமெங்கேபோகுமோ அழிந்துப்போவாயோ
அதுகளைநினைத்துசிரித்தேனென்றார் அஞ்சுதலில்லாமல்
அந்தவார்த்தையைகாதிலேகேட்டு பூதராசாவும்
முன்னாலொருத்தன் அலியெனவந்தான் பேருதனைச்சொல்லி
இப்படியெத்தனை அலிகளிருக்கிறார் ஏனைகுலத்தானை
புத்தியில்லையோகொஞ்சமும் அலிக்கிபயித்தியக்காரர்கள்
சண்டைக்கிவாராதிருப்பதுசரியா சமயம்வருமானால்
எதிராளியோடெதிர்த்திடவேண்டும் என்றான்பெரும்பூதம்
அந்தமொழிதனைகாதிலேகேட்டு அசுகாபப்போது
மலையெனபெயருமெடுத்தால் மண்மலைகல்மலையாகிடுமோ
புலியெனவீண்பெயரெடுத்தமிருகங்கள் புலிபோலாகிடுமோ
வலிமைகளுள்ளவரென்பேரெல்லாம் வலியோராவாரோ
அலியெனபெயர்களெடுத்தமானிடர் அலிப்புலியாவாரோ
எங்களலிப்புலிவருவாராகில் எவருமெதிர்க்கார்கள்
நீயுமுன்னுடப்பூதப்படைகளும் நிற்குமோநிற்காதோ
உன்படையெல்லாமவருடவாட்கிரை ஆகுமோஆகாதோ
பூதப்படையெல்லாமவருடகைக்கிப் போதுமோபோதாதோ
என்றுசொல்லிடக்கேட்டவன்பூதம் இருகண்ணெருப்பாகி
இனிமேலுங்களையடிப்பதில்லை அலியார்வரட்டும்
அவருடவல்லமையறியநான்வேணும்ஆனாலாகட்டும்
என்றுசொல்லிகாவிற்போட்டான் எல்லார்க்கும்விலங்கு
முன்னால்வைத்தஅல்காப்மாருடன் கூடகொண்டுவைத்தான்

(உகமானூர் தோப்பிற்குவருதல்.)

அந்தத்தோப்பினுள்பூதராசனு மானுவீமிகபேசி
கொடியபூதம்சின்னின்படைகளை கூட்டமாகச்சேர்ந்து
காவில்போட்ட விலங்குடன் அல்காப் மார்கள்தனைக்கூட்டி
வெங்கலத்தேர்மேலேறினனப்போ பூதராசாவும்

சந்தோஷமாகத்தோப்பதைவிட்டு சேனைப்படையோடு
சாரதிதேரினைநடத்திவந்தான் தீரமூடிராசன்
உசமானுடைதோப்பிற்குவந்து இறங்கினனப்போது
அந்தவேளையிலென்னசெய்தான் பூதாராசாவும்
விலங்குப்போட்ட அஸ்காப்தனிலோர் அஸ்காப்தனையழைத்து
காலின்விலங்கையொடித்திடச்சொன்னான் கருத்தபூதாராசன்
எதிரிலழைத்துஉனக்கொருசேதி யிப்போதுசொல்லுவேன்
அந்தப்படிபோய்சொல்லிடுவென்றான் ஒன்றுந்தப்பாமல்
அலியும்வரவில்லைகம்பரும்வரவில்லை என்னுடன்சண்டையிட
ஆசையாலவர்களைசண்டைகள்செய்திட அகத்தியம்வரச்சொல்லு
பேடிகள்போலொளித்திருப்பது பேடிகளவேலையது
சேவகப்பாடியாயிருந்தாலென்முன் சண்டைக்குவரச்சொல்லு
மீசைகள்முளைத்தஆண்பிள்ளையானால் முன்னேவரச்சொல்லு
என்னைகெலித்திடும்பேர்களாயிருந்தா லெதிரில்வரச்சொல்லு
பெண்ணாய்ப்பிறந்தஆண்பிள்ளையானால் ஓடிபோகச்சொல்லு
சண்டைச்செய்திடவாராபோனால் சண்டைக்குநான்வருவேன்
சென்னுள்பறந்திடகோட்டையிடிப்பேன் சிறைகளைநான்பிடிப்பேன்
சீக்கிரமாகவரச்சொல்லென்று சொல்லிஅனுப்பிவைத்தான்
புத்திசொல்லிஅழைத்துவாவென்று போவென்றுசொன்னான்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போதசகாபு
புலிவாய்மீண்ட ஆடதுபோல பெரியஅஸ்காபு
கையும்நடுங்கிட காலும்நடுங்கிட களைத்தஅஸ்காபு
ஓரோட்டமாஓடியேவந்தார் உடலில்வேர்வையிட
மக்கத்தைநாடியேஓடியேவந்து மன்னரஸ்காபு
பள்ளியில்நன்னபிதம்மைக்கண்டு பாதந்தான்பணிந்து
அல்லாஹுதேஅகம்மதுநபியே அண்ணல்நபியினரே

(நபிநாயகத்துக்குச்சேதிசொல்லுதல்)

வீரியமாகப்போனோம்நாங்களும் விருதுமிகபேசி
திடவையினருகினில்போனோமெல்லாம் தயங்கினோம்)
அந்தபூதப்படையினைபார்த்தோம் அண்ணல்நபியினரே
ஒவ்வொருமலைபோலிருக்கிறாரெல்லாம் ஓடிடமுடியாது
அந்தகூட்டத்தாரெல்லாரைக்கண்டு அலறிஎழுந்தார்கள்
நாங்களுமவர்களைக்கண்டிட உடலில் நடுக்கமிகவாச்சு
அந்தவேளையில்பூதாராசனும் அவர்களைதானமர்த்தி
ஷம்சதீனவனைபார்த்தொருசேதி கேட்டானப்போது
நானலியென்றுசொன்னானவனுக்கு நடுக்கமுமில்லாமல்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போபூதாராசன்
எழுபதுபாரதண்டாயுதத்தை எடுத்தான்கைதனிலே
ஓங்கிஓங்கியெத்தடியடித்தான் உக்ராசபூதம்

அந்தஅடியினுலாயிரம்பேர்கள் அல்லாப்புறஞ்சேர்ந்தார்
அந்தவேளையிலகிலுகிலுவென்றே அஸ்காப்தான்சிரித்தார்
சிரித்ததைக்கண்டுபூத்ராசனும் தண்டாயுதந்தன்னை
எடுத்ததைக்கீழேசோரவேவிட்டு இருண்டபெரும்பூராம்
என்னகாரணமேதுகாரண மென்னைநீபார்த்து
சிரித்தவயணத்தைசிக்கிரமாகவே சொல்லென்றுகேட்டான்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போதசுகாபு
எங்களையின்றுநீயிப்படிசெய்தா யிப்பழிதான்வாங்க
ஆண்டவன்புலியார்வருவார்நாளை அவருடகையாலே
என்னபாடுகள்பட்டிடுவாயோ எப்படிமூளிப்பாயோ
என்றுநினைத்துநான்சிரித்தேனென்றார் இரசூல்நபியே
அந்தவார்த்தையேகாதிலேகேட்டு அந்தபூதராசன்
இனிமேலுங்களை அடிப்பதேயில்லை யென்றுவிலகிப்போட்டு
அலியேவரச்சொல்லென்றவன் சொல்லி அனுப்பினானென்னை
அவர்களைவெல்றிடமனிதராலாகுமா அவர்கள்பலபேரெலாம்
சின்னமனிதரால்வெல்லமுடியுமா திரண்டபெரும்படையே
கொஞ்சமனிதரால்வெல்லமுடியுமா கோமான்திருதூதே
இப்படிசொல்லிடநபியுல்லாவும் எண்ணம்பெரிதாகி
மற்றபேர்களுஞ்சஞ்சலமாகினர் வாயைதிறக்காமல்
மாண்டவர்போலெண்ணங்கள்கொண்டு வலிகள்குறைந்தார்கள்
கொடியபூதப்படைகளைவெல்ல முடியாதெனவெண்ணி
சஞ்சலம்பெரிதாய்ப்போனதெல்லாஞ் சண்டைக்கிதானஞ்சி
அந்தவேளையில்பொழுதும்போச்சுது அவனியிருளாச்சு
அப்போதொழுதனர்மகரீபேவக்தா ஆகிதனைநினைத்து
தொழுதுஅவாவுமோதிமுடித்தார் தாயநபியுல்லா
அஸ்ஹாப்மார்களெல்லாந்தொழுதனர் அகமதுபின்னாலே
இலவைப்பகுந்தநபியுல்லாவும் நெடியோன்தனைபோற்றி
பொழுதுவிடிந்தபின்னென்னவிட்டு வாங்கள்போங்களிப்போது
உண்டுறங்கிபின்னெழுந்தினிவாங்கள் உங்கள்பனைபேசி
என்றுபலருக்கும்விடையினிகொடுத்தா ரிறசூல்வேதாம்பர
அந்தவார்த்தைதனைகாதிலேகேட்டு அஸ்ஹாப்மாரெல்லாம்
பார்த்தபணிந்து அவரவர்வீடு போனதெல்லோரும்
அந்தவேளையில்நபியுல்லாவும் ஆயாசத்தோடு
தங்கள்திருமனைபுகுந்தார்வேத சர்தார்நபியுல்லா
உலகினிலுள்ளபடைப்புகளெல்லா முறக்கமாகிப்போச்சு
அந்தகாலையில்நபியுல்லாவும் அரிவையினைவோடு
நித்திரைபோயினர் அந்தகாலையில் நெடுமாசிபுரிலும்
ஆகிசலாமும்நபிக்கிச்சொல்லி அல்லாநபியேகேள்
சஞ்சலம்நீங்கள்செய்திடவேண்டாம் சல்லல்லாநபியே
வசிதாய்ப்போனவீரனையெல்லாம் செல்வமிகுதொக்க
கொழுத்த அடக்கிறேனும்நாங்கள்கூடி சொற்கவாதியாளர்
அவர்களைநினைத்துவிசனங்கள்வேண்டாம் அகமதுநபியே

என்றுசேதிகள்பலதுஞ்சொல்லி இறசூல்நபிதமக்கு
வானிலிடமாப்போயினர்சிபுரீல் இரிசைநபியைவிட்டு
சேவல்கள்கூவுவேளையுமாச்சுது சேவல்கள்கூவினது
பசறுவேளையுமாச்சுது அப்போ பயகம்பர்நபியுல்லா
பள்ளிக்குப்போயினார்தொழுதிடவென்று பண்டைத்தோன்புறமாக
அந்தவேளையில்யார்களும்வந்தார் அஸ்காப்களும்வந்தார்
எல்லாங்கூடிதொழுதுக்கொண்டனர் இறையோன்றனக்கஞ்சி
பொழுதும்விடிந்ததுவெளிச்சமானது பொழுதும்தான்முளைத்த

(அஸ்காப்மார்களுக்குஉறுதிகூறுதல்.)

என்றன்அஸ்காப்மார்களேநீங்கள் யான்சொல்லக்கேளும்
சந்தோஷமானசேதிகள்சொல்லினர் சிபுரீல்தான்வந்து
சஞ்சலநீங்கள்படவேவேண்டாம ஷஹிதாய்ப்போனோ
தொழுதுவடக்கிறேனைநாங்களென்று சொன்னோன்றனக்கு
ஆகையாலிந்தபூமியிலுள்ளோ ரெல்லாம்தீரவேணும்
நீர்மேல்குமிழிபோல்நரர்பிறவாழ்வு நிலையில்லாசடலம்
விதியின்படியேயுலகினிலவரவர் விட்டுப்பிரியவேணும்
விதியைவிலக்கிட ஆருமோநம்மால் ஆகாதொருபோதும்
கடலிலிறந்திடக்கட்டளையுள்ளவர் கரையிற்சாவாரோ
நோயாலிறந்திடக்கட்டளையுள்ளவர் நோயிலாச்சாவாரோ
தாய்கள்பிரிந்திடப்பிள்ளைகள்சாவார் சஞ்சலமிகவாக
பிள்ளைகள்பிரிந்திடத்தாய்கள்சாகுவார் சிந்தைமிகநோக
நல்லவர்பொல்லார்எல்லாஞ்சாகுவோர் நாமும்செத்திடுவோம்
நாயனொருவனேயழிவில்லாதவன் நாளுமிருப்பவனும்
இப்படிநானுவிதமாச்சொல்லிட எல்லாருமனமொத்து
சந்தோஷமானாரந்தவேளையில் சருதார்நபியுல்லா
என்றன்அஸ்காப்மார்களேகேளு மின்பமோடெல்லாம்
வந்திடும்பூசற்படைமேற்போகிற வல்லவர்யாரென்றார்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்துல்அசீசென்போர்
துள்ளியெழுந்தார்பெரும்புலிபோலத் தாதர்முன்னாக
பாய்ந்திடும்சிங்கம்போலவெழுந்தார் பயகம்பர்முன்னாக
இராசர்கள்தலையைப்பந்துபோல்வெட்டும் இராசமுடிமன்னர்
அதிகவல்லமையுள்ளவரான அப்துல்அசீசன்று
நபியுல்லாவின்பாதம்பணிந்து நபியேநாயகமே
ஒட்டகைதானில்சீராவையழைத்த உயர்புகழ்நபியே
நானொருஅடியேனிருக்கிறேன்சண்டைக்குநான்போய்வென்றிடுவேன்
தங்கள்துவாவின்வரிசையுமானால் சண்டைக்குநான்போறேன்
ஆதியின்கிருபையுமிருக்குமேயானால் [illegible]வென்றிடுவேன்
அடியேன்றனக்குவிடைநீர்தந்தால் அடுத்தக்கொணர்ந்துவாறேன்
இப்போதெனக்குவிடைநீர்தாரும் யாரொருத்தன்போதும்
என்றுஅப்துல்அசீசசொல்லிட இறசூல்நபிகேட்டு

சந்தோஷங்கொண்டார் அப்துல்அசீசின் சத்துவமொழிகேட்டு
நல்லதுநல்லதுஉன்றன்கூட நயமுடன் ஐயமாக
சண்டைக்குப்போகப்பத்தாயிரம்பேர் தம்மையனுப்புகிறேன்
அந்தக்குதிரைக்காரரும்நீயும் அமருக்குப்போங்கள்
இப்போதெல்லாம்வீட்டுக்குப்போய் உண்டுதின்றுவாரும்
சண்டையினுபுநமெல்லாக்கூட்டி ஜலுதியில்வாரும்
போங்களென்றுநபியுல்லாவும் போகவிடைகொடுத்தார்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அஸ்காப்மாரெல்லாம்
பாதம்பணிந்துபோனார்வீட்டுக்குப் பெரியோனருளாலே
உண்டுகுடித்துமகிழ்வுகள்செய்தார் உற்றபடைபோக
சந்தனம்பன்னீர்வாரிப்பூசினர் சவ்வாதொடுவாடை
கமகமவென்றுவீசிடப்பூசினர் கடவுள்போலே
சண்டைக்குப்போகஆயுதமணிந்தனர் சற்றுமஞ்சாமல்
பளபளவென்னமின்னிடுங்கத்திகள் எடுத்தார்கைதனிலே
தூவிடுபொடிபோற்றலைகளையுடைத்திடத் தண்டாயுதமெடுத்தார்
சிற்றுகத்திகள்பட்டாகத்திகள் சுருளுகத்தியெடுத்தார்
ஈட்டிகளெடுத்துக்கைகளில்பிடித்தார் இடையில்கட்டாரி
அம்பும்வில்லுந்தோளிலணிந்தனர் ஆங்காரங்கொண்டு
பலபலசண்டைஆயுதமணிந்தார் பாரோர்தானடுக்க
குதிரைகளேறிக்கதனரெல்லாங் கொற்றவர்நபிமுன்னே
வந்தபடைகளைக்கண்ணுற்றுக்கண்டு வல்லநபியுல்லா
வாழ்த்திவரமுங்கொடுத்துநபியுல்லா போகவிடைகொடுத்தார்

( அப்துல்அசீசுபூதப்படைபோகுதல். )

நபியுல்லாவின்பாதம்பணிந்து நடந்தார்படைபோக
வீதிகளெல்லாம்விட்டுநடந்தார் வேந்தர்படைவீரர்
மாடங்களெல்லாம்விட்டுநடந்தார் வல்லபடைவீரர்
ஆறுகள்தோப்புகளெல்லாங்கடந்தார் அரசர்படைவீரர்
தோப்பின்கிட்டேபோனாரெல்லாம் சிங்கம்புலிபோல
படைகள்வருதலைக்கண்டாரந்தப் பூதப்படையானோர்
அனுமதித்தெழுந்தார் பூதங்களெல்லாம் ஆங்காரங்கொண்டு
எழுந்ததைக்கண்டு பூநாசனும் சும்மாயிருமென்றான்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அந்தப்படையோர்கள்
எல்லாம்சும்மாத்தானேயிருந்தார் அந்நேரவேளையிலே
ஏழைகுலத்திலுதித்தமனிதரோ எங்கேவந்தீர்கள்
சின்னகுலத்திலாகியபேர்களே சண்டைக்குவந்தீரோ
பஞ்சகுலத்திலாகியபேர்களே படையாய்வந்தீர்களோ
எலிகள்பூனையைக்கெலித்திடலாகுமோ ஏழைமானிடரோ
மான்கள்புலியைப்பிடிப்பவராய் வந்தீரென்முன்னே
ஆனாலாகட்டும்நல்லதுநல்லது அறிவில்லாப்பேரோ
உன்பேரென்னசொல்லிடுவெனக்கு என்றான்பெரும்பூதம்

அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்துல்அசீசென்பேர்
என்குலபேர்களைவெட்டியபழியை வாங்கவந்தேனென்றார்
உன்னையுமுன்படையோர்களையெல்லாம் இருவெட்டாய்வெட்டி
சிங்கஅலிபட்சிகாளென்னசொன்னார் சற்றுமஞ்சாமல்
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு ஆங்கார பூதம்
கிலுகிலுவென்றுசிரித்தானப்போ கையைமூக்கில்வைத்து
இப்படியெத்தனை அலியாருண்டு இந்தப்படைக்குள்ளே
வருவோரெல்லாம்காணலாமே யென்றுவாரார்கள்
ஆனாலாகட்டுமிவனிடவலியை அறிவோமென்று
கனைக்கிரிசைக்கவிருந்தானப்போ பூதராசாவும்
அந்தவேளையில்அப்துல்அசீசும் அஸ்காப்மாரெல்லாம்
கைகளிலம்புகள்தன்னையெடுத்தார் கனத்தகோபமுடன்
பூதப்படைமேல்விட்டாரம்புகள் பெரியமழைபோல
களத்தபடைமேல்விட்டாரம்புகள் காரிடிதான்போல
மழைபொழிவதுபோல்பொழிந்தாரம்புகள் மண்விண்தெரியாம
அந்தவேளையில்கோபமுண்டது பூதராசாவுக்கு
சிவந்துபோச்சுதுகண்களிரண்டும் தீயின்நிறம்போல
எட்டிப்பழம்போற்சிவந்துபோச்சுது பூதராசாவுக்கு
அந்தவேளையிலென்னசெய்தான் அறிவில்லாதபூதம்
எழுபதுபாரந்தண்டாயுதத்தை எடுத்தான்கைதனிலே
வானிடிபோலேதானடித்தான் வலுவுதனைக்கொண்டு
அந்தஅடியினால்மாண்டுமடிந்தார் ஐம்பதுபேர்மட்டும்
இரக்கமுகாணமுமில்லாப்பூதம் எடுத்தான்தண்டமதை
பின்னுமோங்கியோரடியடித்தான் பெலமெல்லாங்கூட்டி
அந்தஅடியினாலாயிரம்பேர்க ளடியோடேமாண்டார்கள்
கொஞ்சமும்பாதகனச்சமில்லாமல் கோபமிகக்கொண்டு
பின்னுமடித்திடத்தண்டாயுதத்தைப் பெலமாக்கையிலெடுத்தான்
அந்தவேளையில்அஸ்காபொருவர் அவனுடமுகம்பார்த்து
கிலுகிலுவென்றுசிரித்தார்நின்று கொஞ்சமுமஞ்சாமல்
சிரித்ததைப்பூதராசனுங்கண்டு எடுத்ததண்டமதை
சோரவேவிட்டான்பூமியின்மேலே சிங்கபூதராசன்
என்னவயணத்தாலேநீசிரித்தா யென்முன்னேநின்று
சண்டைகளத்திலஞ்சாமல்நீசிரித்த வகையைச்சொல்லு
என்றுகேட்டான்பூதராசனும் ஒன்றுக்குமஞ்சாமல்
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு அப்போதஸ்காபு
அறிவில்லாதபூதராசனே அடாவளர்ந்தவனே
சிரித்தவயணத்தையென்னைக்கேட்கிறாய் சொல்கிறேனீகேளு
எங்களையிப்படிநீயுமடித்தா யீனமில்லாப்பாவி
[illegible]ளையதினத்தில்அலிப்புலிவருவார் [illegible]ன்புலியானோர்
அவருடகையிலென்படுவாயோ அதைநீயறிந்தில்லா[illegible]
வெட்டிடுவாரோகுத்திடுவாரோ வருத்தங்கொடுப்பாரோ
கட்டிடுவாரோதட்டிடுவாரோ சத்துவந்தானேங்க

என்னபாடுகள்படுத்திடுவாரோ எனக்குத்தெரியாது
அந்நாடலினைத்துச்சிரித்தேதென்றார் அண்ணலசுகாபு
அந்தவார்த்தைதனைக்காதிலேகேட்டு அப்போராசபூதம்
விரலைவைத்தான்மூக்கின்மேலே வல்லராசபூதம்
என்னசொன்னாயே நீசொன்னாப் உனக்குலத்தானே
அலியாரென்றுனைத்தனைபேர்களிருக்கிறார்களின்னம்
உன்னுடன்கூட்டி அலியாரென்று மூன்றுபோச்சு
இன்னமும்அலியாருண்டோசொல்லிடு என்றான்பெருப்பூதம்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அ[illegible]தசுகாபு
அலியாரென்றுநான்பெயர்களைச்சொன்னால் அலிபாராவாரோ
வாளைக்குலங்களைப்புலிவருவார் நல்லச்சண்டைசெய்ய
அவனாகவெளிர்த்திட ஆகாதுன்று லதிகவல்லவர்காண்
இந்தவுலகினில்சரியாயவர்க்கு யாருமில்லையென்றார்
அவ்வார்த்தைதனைக்கேட்டுப் பூதராசாவப்போது
அசுகாபுமார்கள்காலுக்குவிலங்குகள் போட்டானப்போது
முன்னால்வைத்தஅசுகாபுமாருடன் கொண்டுபோய்வைத்தான்
தன்னிடபூதப்படைகளைநோக்கி சீக்கிரமாய்நீங்கள்
தயாராகிடும்போவோமென்றான் பூதராசாவும்
வெங்கலத்தேர்மேலேறினன்ராசன் வீரியமிகப்பேசி
சேனைப்படைகள்சுற்றிவந்திடத் தோப்புதனைவிட்டு
வல்லஅலிப்புலிதோப்பினிற்குள்ளே வந்துஇறங்கினார்கள்

(அலியாருடையதோப்பிற்குவருதல்.)

அந்தத்தோப்பினுள்ளிறங்கியபின்பு அப்போ பூதராசன்
விலங்குகள்போட்ட அசுகாபுமார்களி லொருவர்தனையழைத்து
காலில்போட்டவிலங்கதையொடித்தான் கலத்தராசபூதம்
கிட்டேயழைத்துசேதிகள்சொல்கிறேன் கேளென்றுசொன்னான்
உங்களலிப்புலிதனக்குப்புத்தியுங் கொஞ்சமுந்தானில்லை
சண்டைகள்செய்திட எதிர்வாராமல் தலையைமறைத்துக்கொண்டு
வல்லமையில்லாப்போர்களையனுப்பி மாளவைக்கிறார்பார்
வல்லமையுள்ளவரானால்என்முன் வந்துநிற்கவேணும்
சண்டைசெய்திட வல்லமையிருந்தால் சமர்த்தைப்பார்க்கவேண்டும்
மீசைமுளைத்தஆண்பிள்ளையானால் முன்னில்வாரவேணும்
வல்லமையில்லாப்பேடியாயிருந்தால் ஓடிப்போகவேணும்
அலியார்வருவார்வருவாரென்று இருந்தேனிதுவரைக்கும்
அலியேன்வரவில்லைசண்டைகள்செய்திட அகத்தியம்வரச்சொல்லு
அப்படியலியார்வாராமல்போனால் இனிமேல்நானஞ்சேன்
அந்தப்பதிக்குள்வந்துபுகுந்தேன் அட்டியொன்றில்லாமல்
வருவேனுனைவிட்டிட அஞ்சேன் குத்திடநானஞ்சேன்
பெண்டுபிள்ளைகள்சிறையும்பிடிப்பேன்பெரியவருத்தஞ்செய்வேன்

இந்தச்சேதியையுங்களலிக்கு இப்போநீபோய்ச்சொல்
என்றுபோகவிடையுங்கொடுத்தான் இருண்டபூதராசன்

(மக்கத்திற்குச்சேதிசொல்லவருதல்.)

அந்தவார்த்தையைகாதிலேகேட்டு அப்போதசகாபு
புலிவாய்மீண்டமானதுபோல பொழிலதைதான்விட்டு
கைகால்நடுங்கிட ஓரோட்டமா கடுகதானேடி
மக்கமாநகரம்வந்துபுகுந்தார் வல்ல அஸ்காபு
பள்ளியடுத்துநபியுல்லாவின் பாதந்தனைபோற்றி
என்னசொல்லுவேனேது சொல்லுவே னிறசூல்நன்னபியே
கண்ணால்கண்டதைசொல்லிடக்கேளும் காரணநன்னபியே
வழிகள்கடந்துபோனேமெல்லாம் வல்லமைமிகபேசி
தோப்பின்கிட்டேபோனேமெல்லாம் சேனைபபடையாக
கருமலைபோலபூதங்களிருக்கக் கண்டோமெல்லோரும்
எங்களைக்கண்டஉடனேபூதங்கள் எல்லாமெழுந்ததுகள்
அந்தவேளையில்பூதராசனு மவர்களைதானிறுத்தி
வந்தவர்நீங்கள்யாரென்றுகேட்டான் வல்லராஜபூதம்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்துல்அசீசவரும்
நாவலியென்றுபூதமுன்னாக சொன்னாரஞ்சாமல்
அலியாரென்றிடகோபங்கொண்டான் ஆங்காரபூதம்
தண்டாயுதத்தாலிரண்டடியடித்தான் ஆங்காரங்கொண்டு
ஓங்கிஓங்கியிரண்டடியடித்தான் ஒன்றுக்குமஞ்சாமல்
அந்தஅடியினால்அஞ்சாயிரம்பேர் அடியோடேமாண்டார்
அதிலோர்அஸ்ஹாப்கிலுகிலுவென்று சிரித்தாரவன்முன்னே
எடுத்ததண்டாயுதத்தைவிட்டு எதிராளிபூதம்
என்னவிதத்தால்சிரித்தாய்நீயும் எனக்குச்சொல்லென்றான்
அந்தவார்த்தையைகாதிலேகேட்டு அதற்குஅஸ்காபு
எங்களலிப்புலிகையால்நானே யென்னப்படுவாயோ
என்றுநினைத்துசிரித்தேனென்றார் பூதராசனுக்கு
அந்தவார்த்தையேகாதிலேகேட்டு அப்போபூதராசன்
மிஞ்சியபேற்குபோட்டான்விலங்கு மனமஞ்சாபாவி
தேருடன்தானும்அலியார்தோப்பில் வந்துஇறங்கிவிட்டான்
என்கால்விலங்குதன்னையொடித்து என்னை அனுப்பிவித்தான்
சண்டைக்குஅலியேசீக்கிரமாகதான் வரச்சொல்லென்றான்

கம்பர் தன்னையும்சண்டைக்கியென்றான் வந்திட சொல்லென்றான்
அவனைவென்றிட மனிதராலாகுமா அகம்மதுநன்னபியே
கொஞ்சமனிதரால்வெல்லமுடியுமா கோமான்திருத்தாதே
சின்னமனிதரால்வெல்லமுடியுமா நீனின்னபியே
அந்தசொல்லைகாதிலேகேட்டு ஆகம்மதுநபியுல்லா
அப்போசிலஅநசிஅந்துசொன்னார் அல்காப்மார்களுக்கு
சேதிகள்கேட்டுபயந்தசெல்லாம் சண்டைக்கிதான்போக
பூதபடைகள்தன்னைநினைந்துப் பயந்தாரெல்லாரும்
அந்தவேளையில்நபியுல்லாவும் அறிவுமிகச்சொன்னார்
பொழுதும்போச்சுது இருளுமானது பூலோகமெங்கும்
ஆதியைத்தொழுதாரெல்லாங்கூடி அன்பாதுவாஓதி
தொழுகையுமுடிந்தது அந்தவேளையில் சொன்னார்நபியுல்லா
வீட்டுக்குப்போயிபுண்டுகுடித்து விடிந்துவாருமென்றார்
அந்தவார்த்தைதனையகேட்டெல்லோரு மாசர்தாள்பணிந்து
அவரவர்வீட்டுக்குப்போனாரெல்லா மாயாசத்தோடு
நபியுல்லாவுந்தங்கள்வீட்டுக்கு தானும்போனார்கள்
உலகினிலுள்ளபடைப்புகளெல்லா முறக்கமாகிபோச்சு
நபியுல்லாவுமந்தவேளையில் நித்திரையானார்கள்
அந்தவேளையில்சிபுறாயீலும் வந்தார்நபியிட்டே
ஆதிசலாமும்சொல்லியனுப்பினான் அப்போசிபுறாயீல்
வல்லோன்தூதேதவசிசையுள்ளோரே மதிவடிவானோரே
மடிந்தபேர்களைத்தொழுது அடக்கினேனும் வருந்திடவேண்டாம்நீர்
சொர்க்கவாதிகளானாரெல்லாம் தூயநபிமணியே
இப்படிசொல்லிசிபுரீல்போனா ரிறசூல்தனைவிட்டு
பஜருவேளையுமாச்சு அப்போ னாயகநபியுல்லா
பள்ளிக்கிப்போனாந்தவேளையில் வந்தாரெல்லாரும

(நசியத்துச்சொல்லுதல்.)

அந்தவேளையில்தொழுதாரெல்லாம் அல்லாதனைநாடி
பஜருத்தொழுகையும்தொழுதுமுடித்தார் பாரநபியுல்லா
என்னுடைஅல்காப்மார்களேநீங்க ளெல்லாருங்கேளும்
முன்னாள்விதித்தவிதியின்படியே முடிக்கிடுமிவ்வுலகில்
நம்முடநட்டமுடியாதொன்றும் நாயனருள்படியாம்
மடிந்தோர்தங்களைநீங்கள்நினைத்து வருந்திடலாகாது
இறப்பும்பிறப்புமில்லாதிருப்போ னேகனொருவன்றான்

மற்றனைவெல்லாமழியுமல்லது மண்மேல்நிலையில்லை
ஷகிதாய்மாண்டவர்கியாமத்துநாளில் சிறப்புமிகபெருவார்
அவர்களதிக்கெருமைகள்பெறமுரோ அல்லாஇடந்தனிலே
சங்கையுமேன்மையுந்தன்றுபேர்தன் சுவர்க்கவாதியானோர்
என்றுபலவாறுசகேஹசொல்லிட எல்லாமகிழ்வானார்
விசனங்களெல்லாம்நீங்கியேபோச்சு மகிழ்வுமிகவாச்சு
அந்தவேளையில்நபியுல்லாவும் அவர்கள்தனைநோக்கி
இன்றுபூதப்படைமேல்போரவர் யாரென்றுகேட்டார்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போஉமாமுகதி
சந்தோஷமாக்கசபைமுன்னெழுந்து சருதார்தனைபார்த்து
எங்கள்நபியேயிறையோன்றூதே எங்களுயிர்க்குயிரே
காட்டில்குடிக்கநீராயழைத்த கபிபுநன்னபியே
மானுக்குப்பிணையாய்நின்றவரேயருள் வள்ளல்நபினாரே
அடியேனொருவனிருக்கிறேனென்னை நலமாயனுப்பிடுவீர்
சண்டைகள்செய்துகெலித்துநான்வாரேன் சருதார்நாயகமே
பூதப்படைகளைவெட்டிகெலிக்கிறேன் போகவிடைதாரும்
என்றுஉமறுமகதியுஞ்சொன்னார் இறசூல்நபிமுன்னம்
அந்தவார்த்தையேகாதிலேகேட்டு அகம்மதுநபியுல்லா
அலியார்சண்டைக்கிப்போவாராகில்லீனுமிருப்பானா
அலியார்போவாராகில்சண்டை பலனுஞ்செய்வானா
அலியாரில்லாபடியால்பூமி அலையும்படியாச்சு
அலியார்பெரியவர்வல்லமைதன்னில் அல்லாப்புலியவாம்
அலியார்சாத்தாவிருக்கிறபடியால் அவனும்வரலாச்சு
ஆகையால்நீரும்பூதப்படைமேல் அல்லாவுதவியினால்
சண்டைக்கிப்போருமிரண்டாயிரம்பேர் தன்னையுடன்கூட்டி
தனியர்ப்போவதுசரியலவென்று சொன்னார்நபியுல்லா
அந்தவார்த்தையைகாதிலேகேட்டு அப்போஉமர்மகதி
ஆதியினொளியேநாறுவிளக்கே அரசர்க்கரசேகேள்
அல்லாஒருவன்கிருபையுன்னுதவியு மானாலதுபோதும்
தங்கள்துவாவின்வரிசையினாலே சஞ்சலமில்லாமல்
சண்டைசெய்துநான்கெலித்தினிவருவேன் தங்கள்முன்னாக
துணையும்வேண்டாம்படையும்வேண்டாம் தாயநபியாரே.
ஒருவனேபோதுமப்படைவெல்ல உம்பர்புகழ்நபியே
என்றுபுகழ்ந்திட அந்தவேளையில் இறசூல்நபியுல்லா
நல்லதுதனியாய்போகநீவேண்டாம் நல்லதுணையாக

கூட்டிநீர்போகும்பூதப்படைமேல் கேசரியானவரே
நீங்கள்வீட்டுக்குப்போயினிவாரும் நெடியவீரர்களே
என்றசொல்லைகாதிலேகேட்டு எழுந்தார்வீட்டுக்கு

(உமர்மகதிபூதப்படைபோகுதல்.)

வீட்டுக்குப்போயினர்போசனமுண்டனர் வீரர்சூரரெல்லாம்
சந்தனமபன்னீர்பூசினர்மேலில் சவ்வாதொடுவாசம்
மாலைகளெடுத்துகழுத்திலணிந்தனர் மனதுமகிழ்வோடு
தண்டாயுதத்தையெடுத்தனரெல்லாம் சண்டைக்குதான்போக
கத்தியையெடுத்துகையில்பிடித்தனர் கட்டாரியிடையில்
அம்புகளெடுத்துதோளினில்போட்டனர் ஆங்காரத்தோடு
பட்டாகத்தியெடுத்தனரெல்லாம் பாரசண்டைசெய்ய
சுறுளுகத்தியேயெடுத்துகட்டினர் சூரவீரரெல்லாம்
ஆயுதமெடுத்துஏறினர்குதிரை அவரவர்வலியாக
ஏகமாகநடந்துவந்தனரெல்லா மிறசூல்நபிமுன்னம்
வந்தபேர்களைகண்ணுற்கண்டு வல்லநபியுல்லா
பூதப்படைமேல்போங்கள்நீரென்று போற்றிவிடைகொடுத்தார்
வெற்றிகள்பெற்றுவருவீரென்று வாழ்த்திவிடைகொடுத்தார்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அஸ்காபுமாரெல்லாம்
பாதம்பணிந்துபூதப்படைமேல் போகத்துணிந்தார்கள்
குதிரைகள்மேலேயேறினரெல்லாம பூதப்படைபோக
வீதிகள்தன்னைவிட்டுநடந்தனர் வீரியமிகவாக
தூசியெழுந்திடகுதிரைகள்நடந்தது தோப்பினிடமாக
உமறுமகதியர்வருவதைக்கண்டான் இருண்டபெரும்பூதம்
உயர்ந்தவராகவருவதைக்கண்டு பூதராசாவும்
இவர்தானலிபாரென்றுமனதினி லெண்ணிபெரும்பூதம்
இத்தனைநாளாகிப்பின்பலிவந்தா ரென்றுபெரும்பூதம்
எழுபதுபாரதண்டாயுதத்தை எடுத்துகைபிடித்து
உமறுமகதியின்கிட்டேவந்து வானிடிபோல
இத்தனைநாளாய்நீயேன்வரவில்லை என்றுன்தானடா
சண்டைக்குவாராதிருந்ததுசரியா சமத்தாயுன்றனக்கு
அலியெனவுன்றன்பேர்களேசொல்லி ஆள்களனுப்பிவைத்தாய்
எப்போவருவாயென்றுநானிருந்தேன் இன்றுநீவந்தாய்
ஆனலாகட்டுமென்னுடன்சண்டை அலியேசெய்யென்றான்

உன்னுடவலியேயென்முன்காட்டிடு நானறியவேணும்
கெட்டிக்காரனுமலிப்புலியென்று கேள்வியும்நான்பட்டேன்
போட்டிடுசண்டையென்னுடனென்று பெரியமலைபோல
பூதராசனுஞ்சொல்லிட அப்போ பெரியோருமர்மகதி
மலையும்மலையுமெதிர்த்தாப்போல வல்லசண்டைசெய்தார
புலியும்புலியுமெதிர்த்தாப்போல பெரியசண்டைசெய்தார்
சிங்கமுமசிங்கமுமெதிர்த்தாபோல சின்னசண்டைசெய்தார்
கல்லுங்கல்லுமெதிர்த்தாற்போல் கடினசண்டைசெய்தார்
இடியுமிடியுமெதிர்த்தாற்போல இருவரும்சண்டைசெய்தார்
அந்தவேளையில்பூதராசனை அடித்தாருமர்மகதி
காயமும்பட்டுரத்தமும்வந்தது பூதராசாக்கு
அடியும்பட்டுரத்தமுமவந்தது பூதராசாக்கு
கோபமுண்டதுகண்கள்சிவந்தது பூதராசாக்கு
மீசைபடபடவென்றுதுடித்தது பூதராசாக்கு
எட்டிப்பழமபோல்கண்கள்சிவந்தது பூதராசாக்கு
எழுபதுபாரதண்டாயுதத்தை யெடுத்தான்கைதனிலே
ஆங்காரங்கொண்டோரடியடித்தான் அஞ்சுதலில்லாமல்
அந்தஅடிதுபட்டதுஉமரு மகதியின்தலைமேலே
தலையுமொடிந்துரத்தமுமோடின சித்திரம்போல்நின்றார்
இன்னுமோரடியோங்கியடித்தான் பெரியபூதராசன்
அந்தஅடியினால்கீழேசுழன்று விழுந்தாருமர்மகதி
அந்தவேளையில்பூதராசனு மாங்காரங்கொண்டு
தண்டாயுதத்தைப்பூமிமேல்வைத்து சமர்த்தர்மார்மேலே
காலால்மிதித்துக்கத்தியைவாங்கிக் கழுத்தையறுக்கப்போனான்
அந்தவேளையிலுமருமகதியும் அவனுடமுகம்பார்த்து
கிலுகிலுவென்றுகிரித்தாரப்போ கொஞ்சமுமஞ்சாமல்
சிரித்ததைக்கண்டுபூதராஜனும் சீக்கிரமாயெழுந்து
கெட்டிக்காரனையென்முன்வந்த அலியேநீகேளு
கழுத்தைபறுத்திடுஞ்சமயந்தனிலேகிலுகிலுகிலுவென்று
என்னவிதத்தால்சிரித்தாய்நீசொல் லென்றான்பெரும்பூதம்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போஉமர்மகதி
என்னைவதைத்திட இன்றுநீநினைத்தா யெங்கோனாழிகையால்
நீயுமுன்குலராசனும்பலபேர் நிலுத்தியுள்ளவரும்
நாளையவர்கையில்நீபடும்பாட்டை எண்ணிநான்சிரித்தேன்
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு ராசாபெருப்பூதம்

உன்னைக்கண்டுநான் அலியென்றிருந்தேன் உமருமகதியே
நீதான் அலிப்புலியென்றுநினைத்தேன் நீயலியல்லவோடா
வேறேபுலிவல்லமையாருண்டோ வெற்றிகொண்டபேரே
ஆளைக்கட்டுமெய்யாரொண்டோர் அதிககெட்டிக்காரோ
அவனைக்கெலிக்கிட ஆகாதோ என்றான் அந்தவகையைச்சொல்லு
என்றுகேட்டான்பூதராசனும் உமர்மகதியைப்பார்த்து
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு அப்போஉமர்மகதி
அலியார்வல்லமைகொஞ்சஞ்சொல்கிறேன் அடாபாவிகேளு
எங்கள்முகம்மதுநபியின்மருகர் ஏகன்பெரும்புலியாம்
ஏழுவானமும்பூமியுமஞ்சிடும் எங்கள்அலியார்க்கு
தேவரெவர்களும்பயந்துநடுங்குவார் எங்களலியார்க்கு
கின்கரும்பூதமும்நடுங்கியொடுங்குவா ரெங்களலியார்க்கு
அவருடவல்லமையிவ்வளவென்று எவருமறியார்கள்
சத்துவந்தன்னில்கொஞ்சஞ்சொல்லிட ஆகாதென்னாலே
என்னைப்போலஅதிகவீரர்கள் அளவிடமுடியாப்பேர்
சத்தனபேரோகைக்கீழிருக்கிறார் எங்களலிப்புலிக்கு
அந்தஅடிமையில்நானொருஅடிமை அதிகவெளியவனுன்
அவர்களென்னிலும்வலிகளுள்ளவர் ஆங்காரமுள்ளோர்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போராஜபூதம்
அசந்துஎண்ணமுங்கொண்டாற்பின்னும் உமர்மகதியைப்பார்த்து
மக்கத்தைநாடிப்போகிறேனிப்போ வல்லசண்டைசெய்ய
இனிமேலிங்குவிருந்திடமாட்டேன் இப்போதேபோவேன்
அலிப்புலிதன்னைவெட்டிக்கெலிப்பேன் அறுப்பேனவன்தலையே
என்றுநாலுவிதமாய்ப்பந்தயம் பூதராசன்சொல்ல
அந்தசேதியைக்காதிலேகேட்டு அப்போதுமர்மகதி
பூதத்துக்கெல்லாம்ராசனுவந்த பூதராசாலே
சேவகப்பாடியாயிருந்தால்நீயும் போகத்துணியவேண்டாம்
சிப்பாய்மகனாயிருந்தால்நீயும் போகத்துணியவேண்டாம்
மீசைமுளைத்தஆண்பிள்ளையானால் போகத்துணியவேண்டாம்
நாளைக்குள்ளெங்களலிப்புலிவருவார் நடுங்கச்சண்டைசெய்ய
உங்களிருபேர்வல்லமைதன்னை நாங்கள்பார்க்கவேணும்
ஊருக்குள்போவதுராஜர்களுக்கு உத்தமமாயமல்ல
சண்டைகள்செய்துகெலித்தபின்போவது சரியென்றுசொன்னார்
உமருமகதியின்சொல்லைக்கேட்டு உயர்ந்தபெரும்பூதம்
நல்லதுநல்லதுஉன்சொற்படியே நீங்களறிந்துகொள்ளணும்

சேதிகள்சொல்லிடு அலியார்க்கென்று சொல்லியனுப்புவித்தான்
அவனுடன்சண்டைகள்செய்திட இந்த ஆகாதெவராலும்
பொல்லாக்கொடியபூதராசனவன் பெரியமலைபோல
நானிக்கு இங்கேவருகிறேனென்றார் நபிகள்நாயகமே
வந்தாலென்னகெடுதிகளாகுமோ வல்லோன்திருத்தூதே
சின்னமனிதரால்வெல்லமுடியுமோ தீனினன்னபியே
இப்படிநானாவிதமாச்சொன்னா ரிறசூல்முன்னாக
அந்தசேதிகள்முழுவதுங்கேட்டு அக்ம்மதுநபியுல்லா
அசுகாப்மார்களெல்லாங்கேட்டு அச்சமிகவானார்
பூதப்படையின்சேதிகள்கேட்டுப் பயங்கள்பெரிதானார்
அந்தசங்கையைநபியுல்லாவு மறிந்துகொண்டனர்காண்
அந்தவேளையில்பொழுதுப்போச்சுது அன்பாய்த்தொழுதுகொண்டார்
அசுகாப்மார்களையவரவர்வீட்டுக்கு அனுப்பினர்வேதாம்பர்
தாங்களும்தங்கள்வீட்டுக்குப்போயினர் தனியோனபியுல்லா

(ஊரார்வலசைபோகுதல்.)

உலகிலுள்ளஉயிர்கள்பலது முறக்கமாகிப்போச்சு
சகலசனங்களுமுறக்கமாயினர் சகத்தியிலுள்ளோர்கள்
நபியுல்லாவுமுறக்கமாயினர் நாடுமுறங்கிப்போச்சு
சந்திரனுலவினன்தாரகையோடு சகமுழுதும்விளக்கி
சேவல்கள்கூவினகிழக்கும்வெளுத்தது தினகரன்றானுதிக்க
பொழுதுவிடிந்தவுடனேசனங்கள் போககாடினார்கள்
பூதப்படையைநினைத்துச்சனங்கள் வலசைவாங்கிறார்கள்
ஜின்னின்படைகளைநினைத்துஜனங்கள் வலசைவாங்கிறார்கள்
அலியாரில்லையென்றுஜனங்கள் வலசைவாங்கிறார்கள்
பெண்டுபிள்ளைகள்தங்களைக்கூட்டி வலசைவாங்கினார்கள்
உயிர்கள்பிழைத்தால்போதுமென்றெண்ணி 'வலசைவாங்கினார்கள்
வீடுகள்போனால்போகுதுவென்று வலசைவாங்கினார்கள்
மாடங்கள்போனால்போகுதுவென்று வலசைவாங்கினார்கள்
பணங்கள்போனால்போகட்டுமென்று வலசைவாங்கினார்கள்
பட்டணம்போனால்போகுதுவென்று ஓடிப்போனார்
நகருகள்போனால்போகுதுவென்று நடந்துஓடிப்போனார்
சீமைகள்போனால்போகுதுவென்று சிதறிஓடிப்போனார்
நாலுதிக்கிலுஞ்சிதறிப்போயினர் அஸ்காப்மாரெல்லாம்
நமக்கத்தைவிட்டுஓடிப்போயினர் அஸ்காப்மாரெல்லாம்

26

இந்தசேதின்பநபியுல்லாக்கு எல்லாந்தான்சொல்ல
அல்லாஹுதர்நபியின்கிட்டே அபூபக்கரும்வந்தார்
கத்தனபியுல்லாவின்கிட்டே கனத்தஉம்றும்வந்தார்
ஒட்டனுகபேசியநபியின்கிட்டே உஸ்மானும்வந்தார்
அந்தவேளையில்அஸ்காப்மார்சிலர் அவர்களும்தான்வந்தார்
அரசினிமேல்றிபநபியுல்லாவே ஆதிதிருத்தூதே
ஆதியினிடத்தில்பேசிப்பின்வந்த அரசர்க்மணியே
பூதப்படைன்கலகத்தாலே பெரியோர்சிறியோரும்
வீடுகள்தன்னைவிட்டெல்லோரு மிரண்டுஓடிப்போனார்
காடுகாடாகச்சிதறியெல்லாரும் கலங்கியோடிப்போனார்
வேதக்கடலேவெற்றியுள்ளோரே விள்ளுமறிவோரே
என்றுநாளுவிதமாவாழ்த்தி போற்றினார்களெல்லாம்

(நபிநாயகம்பூதப்படைபோகுதல்.)

ஆதியொளிவே நூருவிளக்கே அகம்மதுநன்னபியே
இதற்குயோசனையென்னுசொல்லும் இறசூலானவரே
பூதப்படையால்கலக்கமானது பெரியோர்சிறியோரும்
ஓடிப்போயினரூரனைவிட்டு ஒருவருமில்லாமல்
என்னசெய்வோமேதினிசெயவோம் எங்கள்நயினாரே
என்றசொல்லைகாதில்கேட்டு இறசூல்நபியுல்லா
ஒருவருமினிமேல்போகிடமாட்டார் உயர்ந்தப்படைமேலே
பயந்துஓடினர்பூதங்கள்தனக்கு பிள்ளைகள்பெண்டோடு
இனிமேல்சும்மாவிருப்பதுசரியல நாம்பள்போகவேணும்
என்றுசொல்லிடமூன்றுயார்களும் அஸ்காப்மார்களுமாய்
சண்டைக்கிப்போகஆயுதம்பூட்டினர் சருதார்நபியோடு
பூதத்தைவென்றிடஆயுதம்பூட்டினர் பூரிப்பாயெல்லாம்
தங்கள்தங்கள்குதிரைமேலேறி சருதார்நபிமுன்னர்
வந்தனரெல்லாமாயுதம்பூட்டி வல்லநபிமுன்னம்
வந்தபேர்களைகண்ணுற்றுகண்டுவல்லநபியுல்லா
சண்டைக்கிப்போதயாராயினர் சருதார்நபியுல்லா
பூதப்படைகளைநாசம்படுத்திட பெரியநபியுல்லா
வீட்டைவிட்டினிவெளியினில்வந்தார் வேதநபியல்லா
மதினைப்பிளந்தநபியுல்லாவும் வந்தார்படைபோக

எண்ணிக்கையில்லாமலக்குகள்வந்து எமனைமையனுப்பென்ன
கூட்டங்கள்கூட்டமாமலக்குகள்வந்து எப்மையனுப்புமென்ன
சொர்க்கப்பெண்கள்பூமாரிபொழிய தாயநபியுல்லா
ஜேஜேயென்னசுற்றிலுமலக்குகள் சூழ்ந்துதான்வரவும்
வலதுபக்கமாசித்தீகுமறு வாகாதான்வரவும்
இடதுபக்கமாஉசமானரு மொருவர்தான்வரவும்
சுற்றிலும்அஸ்காப்மார்கள்சூழ்ந்து சுற்றிதான்வரவும்
பூதப்படைமேல்புறப்பட்டார்திரு பெரியவனபியுல்லா
என்னசொல்வேனே துசொல்வேன் அன்றுநடந்தவிதம்
மக்கத்தைவிட்டுநபியுல்லாவும் போனார்பூதபடை
மேகக்குடையுமிட்டிடநடந்தார் வேதநபியுல்லா
கஸ்தூரிவாடை.வீசிடநடந்தார் நபிபுகபியுல்லா

(பிள்ளைகள்தகப்பனுக்குப்போய்ச்சொல்லுதல்.)

இப்படிநபியுல்லாவும்சண்டைக்கி போனதைதானறிந்து
வள்ளல்அசனுஹுசைனுமாக வாகாயோடிவந்து
தன்னுடதகப்பனாலியார்கிட்டே தாங்களோடிவந்து
எங்களைபெற்றுஇனிதாயுகந்த எங்கள்தந்தையரோ
நபியின்கூடகல்லமுதுண்ட எங்கள்தந்தையரோ
புலியாம்மோதிரக்கொண்டினிவந்த எங்கள்தந்தையரோ
நபியின்மருமகராய்ப்புவியினில்வீரநாயகதந்தையரே
நாடுகள்தேசங்கள்நடுங்கிடவெட்டிடும் நல்லதந்தையரே
மண்டலமெல்லாமெச்சிடவெட்டிடும் மன்னர்தந்தையரே
என்றுநானாவிதமாபுகழ்ந்து இருந்தாரலிகிட்டே
சுரங்கொண்டலியாரிருப்பதினாலே சொன்னார்மெதுவாக
அன்றுவருத்தமும்சுரமுமாவிருந்த ஆதிப்புலியாரின்
காதுள்விழுந்ததுமெத்தெனபிள்ளைகள் சொல்லியதிருமொழிகள்
பிள்ளைகள்சொல்லைகேட்டாரப்போ பெரியோனலியுல்லா
பதினெல்நாள்சுரமுலியாருக்கு படைத்தோன்விட்டதுவாம்
அதிலேஎட்டுநாள்சுரமுமபோச்சுது ஆதிபுலியாற்கு
இன்னமுமெட்டுநாள்சுரமுமிருக்கு ஏகன்புலியாற்கு
எப்படிப்பட்டசுரமேயானால் இயம்பிடநீர்கேளும்
கடலுக்கடித்தால்கடல்நீரெல்லாம் காய்ந்துவற்றிபோகும்
மலைமேலடித்தால்மலைகளும்வெந்து சாம்பலாகிப்போகும்
மற்றவையொன்றுமந்தசுரத்தை பொறுத்திடமாட்டாது

வல்லவாலியாரானபடியினல் பொருத்தார்வெஞ்சுரத்தை
அப்படிப்பட்டசுரமாயிருந்தும் ஆதிபுலியாற்கு
தன்னுடமக்களின்பேரில்கிருபை சற்றும்போகவில்லை
என்றன்கண்மணியானமக்களே என்னசேதிசொல்லும்
நபியுல்லாவின்கல்பினொளியே யென்னசேதிசொல்லும்
என்னகாரணம்வந்துமுடிந்தது என்றன் கண்மணியே
ஒன்றுமறைத்திடவேண்டாம்சொல்லுங்க ளுயிரின்கண்மணியே
என்றுஅலியார்சொல்லிட அப்போ திரண்டுபிள்ளைகளும்
எங்களைபெற்றபாவாவேகேளும் எங்கள்சொல்லுகளை
மகரிபுபட்டணமிருந்துபூதப்படைகள்வந்ததுவும்
அபுபக்கர்சித்திகுதோப்பினுளிறங்கியதனையழித்ததுவும்
உமர்கத்தாபின்தோப்பினுள்வந்து அதனையழித்ததுவும்
உசுமானுருடதோப்பினுள்வந்து அதனையழித்ததுவும்
அலிப்புலியாருடதோப்பினுள்வந்து அதனையழித்ததுவும்
சண்டைக்கிப்போயசகாபுமாருகள் தான்ஷஹிதானதுவும்
உமறுமகதியின்தலையுமொடிந்திட பூதமடித்ததுவும்
மக்கத்திலுள்ளசனங்களெல்லாம் வலசைகளோடினதும்
நபியுல்லாவுமூன்றுயார்களும் சண்டைக்கிப்போனதுவும்
சுரத்தால்அலிபுலிவருத்தமேலாகி துயரம்பெரிதாகி
பெலமுங்குறைந்துபோச்சுதுவினிமேல் பூதப்படையாலே
பிழைத்திடமாட்டோமென்றெல்லோரும் பேசியோடிபோனர்
இப்படிபாலகர்சொல்லிடகேட்டு வேங்கைபுலியாலி
கோபங்கொண்டொருசத்தமிட்டெழுந்தார் கொற்றஅலியாரும்
போட்டசத்தத்தால்ஆலிபுலியார் படுத்திருந்தபாயும்
பஞ்சுபஞ்சாய்ப்பறந்துபோச்சுது பாரப்பெருஞ்சுரமும்
ஓடிபோச்சுதுவுடலைவிட்டு ஒருநொடிக்குள்ளாக
அப்போதலியார்மக்களைப்பார்த்து கண்மணிபாலரே
நீங்கள்சொன்னதால்பொருத்துநான்கொண்டேன் நீங்களல்லாமல்
மற்றவரொனக்குபெலமில்லையென்று சொல்லிடுவாராகில்
வாளுக்கிரையாய்ப்பின்னேரங்கொடுப்பேன் வரிசையென்மக்களா

அலிறலிஅல்லாகுநபிசல்லலல்லாகு

அலகிவசல்லத்தைக்காணப்போகுதல்.

அந்தவேளையிலா திப்புலியார் ஆங்காரமிகவாகி

சீக்கிரமாகக்கம்பனையழைத்தார் சிங்கப்புலியாலி
அழைத்தசேதியேகாதிலேகேட்டு அப்போதுகம்பர்
மாண்டவுடலுக்குஉயிர்வந்தாபோல் வலுமையுள்ளகம்பர்,
சீக்கிரமாகஓடியேவந்தார் நீலின்புலிமுன்னே
கம்பனைபார்த்தொருசேதியுஞ்சொன்னார் கூத்தலைவிபுலியார்,
நபியுல்லாவைகாணானேன்போராரோ நல்லகம்பரேகேள்,
சீக்கிரமாகதுல்துல்குதிரையே சிங்காரித்துகொண்டு,
என்னுடகத்திசல்பக்காரை எடுத்துதீவரமா,
பின்னால்வந்திடுநபியின்பார்தங் காணநான்போறேன்,
என்றுசொல்லிவேங்கையலிப்புலி எழுந்துசீக்கிரமா,
வல்லோனபியேகண்டிடநாடி வாகாதாண்டந்தார்,
சீக்கிரமாகதேடியேவந்தார் திருநபிபின்னாக
ஆத்திரமாகநடந்தினிவந்தார் அகம்மதர்பின்னாக
வேகமுமிகவாய்நடந்தினிவந்தார் வேதர்பின்னாக,
ஓட்டமாயோடியேநடந்தினிவந்தார்உடையோன்புலியாலி,
அலியார்வருவதைக்கண்டாரப்போ அகம்மதுநபியுல்லா
இந்தசேதியேஅலியார்தனக்கு யார்போய்ச்சொன்னாரோ
வருகிறவிதத்தையார்போய்ச்சொன்னார் வல்லஅலியார்க்கு
இப்படிநபியுல்லாநானுவிதமா எண்ணிடுங்காலையிலே
வல்லஅலிப்புலிசீக்கிரமாக வந்தார்நபிகிட்டே
சிங்கஅலிப்புலிநபியின்கிட்டே சீக்கிரமாவந்தார்
பாரப்புலியார்நபியுல்லாவின் பாதந்தனைபோற்றி,
படைத்தவன்றூதாய்ப்புவியினில்வந்த பயகாம்பர்நபியே,
நபிமார்க்கெல்லாம்நாயகமாகிய நபியேநவமணியே
சுந்திரன்பேசியசருதார்நபியே சாற்றிடவினிகேளும்
என்னவிதத்தால்சொல்லிடவில்லை யிந்தசேதியெல்லாம்
அடியேனிருக்கையில்தாங்கள்போவது அழகாகன்னபியே
பாதநொந்திடநடந்திடவேண்டாம் பாரநயினாரே
நின்றிடுகின்றிடுநடந்திடவேண்டாநாயன்திருவொளிவே
என்றுசொல்லிடநபியுல்லாவு மலியார்முகம்பார்த்து
சேதிகளுனக்குசொல்லிடவேண்டாம் தூயோன்திருமொழியாம்
அதனாலுனக்குசொல்லநானில்லை அலியாரேயென்றார்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போதலிப்புலியார்
பூதப்படைமேலென்னையனுப்பிடும் போரேனெனச்சொன்னார்
சொன்னதைக்கேட்டுநபியுல்லாவும் சிந்தைமகிழ்வாகி

சேனைப்படையாய்சிலதைக்கூட்டி செல்லும்படைக்கென்றார்
அந்தவார்த்தையேஅலியார்கேட்டு அல்லாததிருத்தாமே்த
அடியேன்றனக்குப்படைகளும்வேண்டாம் ஆளுகளுமவேண்டாம்
சகலமுமாளுமிறையோன்கிருபையும் தங்கள்துவாப்பேறும்
இருந்தால்போதும்எனக்கென்றும்உண்டா மிறசூல்கண்மணியே
ஆகையால்சண்டைக்கிப்பூதப்படைமேல் என்னையனுப்புமென்றார்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போநபியுல்லா
அல்லாபுறமசபாசமூம்சாட்டி அனுப்பினார்படைமேல்
வெற்றியுமல்லாகொடுப்பானென்று வாழ்த்தியனுப்பினார்கள்

(அலியார்பூதப்படைபோகுதல்.)

அந்தவேளையில்கம்பரும்வந்தார் அலியார்சொல்படிக்கி
கத்தியுங்குதிரையுங்கொண்டிவிவந்தார் கத்தாபுலிமுன்னே
வாளதைவாங்கிக்கையிற்பிடித்தார் வல்லஅலியுல்லா
துல்துல்குதிரைமேலேறினாரப்போ சூரஅலியுல்லா
கம்பரும்படியேயமுக்கிடஏறினர் கத்தாபுலியுல்லா
கடிவாளத்தைதபிடித்தார்கையில் கத்தாஅலியுல்லா
நடனமாடிடவிட்டார்குதிரையை நாயன்புலியுல்லா
இன்றுஅலியார்குதிரைமேலேறினர் ஏகன்பெரும்புலியார்
என்னசெய்திடநாடிவோரோ வென்றுவப்போது
ஏழுவானமுங்கிடுகிடுவென்று எங்குமதிர்ந்துபோச்சு
ஏழுபூமியுங்கிடுகிடுவென்று எங்குமதிர்ந்துபோச்சு
மலைகளெல்லாங்கிடுகிடுவென்று எங்குமதிர்ந்துபோச்சு
எழுகடல்களுங்கிடுகிடுவென்று எங்குமதிர்ந்துபோச்சு
புலிகளுநடுங்கினகிளிகளுநடுங்கின பூமிதனிலுள்ள
சிங்கமுநடுங்கினயாளியுநடுங்கி தேவுநடுங்கினவாம
விட்டார்குதிரையைபூதப்படைமேல் வேங்கைஅலிபுலியார்
பூமியதிர்ந்திடநடந்தது துல்துல் வேகமிகவாக
காற்றுப்போலபறந்துநடந்தது துல்துல்மிகசிறி
செந்துளெழுந்துபறந்துபோச்சுது துல்துல்காலாலே
கருந்துளெழுந்துபறந்துபோச்சுது துல்துல்காலாலே
எங்குந்தெரியாதூசிமூடின துல்துல்காலாலே
வானமுந்தெரியாபோச்சுது தூசியில் துல்துல்காலாலே
பொழுதேதெரியாமறைந்துகொண்டது தூசிதானெழுந்து
விண்ணுமண்ணுந்தெரியாபோசசுது தூசிதானெழுந்து

வேகமாதுல்துல்பறந்துவந்தது வேகமிகமீறி
மேகம்போலபறந்ததுதுல்துல் வேகமிகமீறி
வாயுவுபோலபறந்ததுதுல்துல் வேகமிகமீறி
வெற்றிகம்பருங்கூடவேவந்தனர் வேங்கைப்புலியோடு
தோப்பின்கிட்டேவந்தனாஅலியார் துல்துல்பரியேறி
தங்கள்வயசுக்குமதிகவயதுபேர் தோப்புளிருப்பதாலே
குதிரையின்மேலேயேறிப்போவது குற்றமெனவெண்ணி
குதிரையைவிட்டுக்கீழேயிறங்கினர் கேசரியலியுல்லா
கம்பருந்தானுமாய்த்தோப்பினுள்புகுந்தனர் காரணஅலியுல்லா
சேனைப்படைகளொன்றுமில்லாமல் போனாலியுல்லா
அலியார்வருவதைக்கண்டார்தோப்புள் அஸ்காப்மாரெல்லாம்
மாண்டஉடலுக்குஉயிர்வந்தாப்போல் மகிழ்வுபெரிதானார்
செத்தஉடலுக்குஉயிர்வந்தாப்போல் செழிப்புமிகவானார்
செத்தபிணம்போலிருந்தோர்களுக்கு செழிப்புமிகவாச்சு
என்னசெய்வோமென்றுநினைத்த எண்ணமோடிப்போச்சு
அலியார்வந்தாரென்றெல்லோர்க்கு ஆனந்தமிகவாச்சு
இனிமேல்நமக்குக்கொஞ்சமும்பயமில்லை யென்றுமகிழ்ந்தார்கள்
கண்ணுங்குளிர்ந்ததுமனமுங்குளிர்ந்தது அஸ்காப்மார்களுக்கு
கட்டிலடங்காச்சந்தோஷமானார் அஸ்காப்மாரெல்லாம்
ஆதிப்புலியார்வருவதைக்கண்டு எழுந்தாரெல்லாரும்
சலாமுஞ்செய்தார்அலியார்தனக்கு அஸ்காப்மாரெல்லாம்
சங்கைகள்செய்தார்அலியார்தனக்கு அஸ்காப்மாரெல்லாம்

(பூதராசனைக்கண்டால்லுதல்.)

எழுந்தபேர்களையுட்காருமென்று ஏகன்புலியாலி
கையால்சைகையுஞ்செய்தாரப்போ கத்தாபுலிஅலி
அந்தசைகையைக்கண்ணுற்றுக்கண்டு பூதராசர்வும்
இவர்களுக்கெல்லாம்பெரியவரென்று எண்ணினான்பூதம்
தங்கள்குலத்தாரிக்குவிருப்பதால் பிச்சைதான்கேட்க
வந்தவராக்குமென்றுஎண்ணினான் வலியபூதராசன்
பிச்சைகேட்டிடவந்தானென்று இருந்தான்பூதராஜன்
ஜயமெடுத்திடவந்தானென்று இருந்தான்பூதராஜன்
சண்டைக்குவந்தவரலியாரென்று சற்றுமறியாமற்போனான்
உபிரைவாங்கவந்தவரென்று ஒன்றுமறியாமற்போனான்
எமருக்கனுப்பிடவந்தவரென்று நாடியறியாமற்போனான்

பிச்சைக்காரனிவனென்றெண்ணினான் பெரியராஜபூதம்
நம்பளிடத்தினில்சிக்கினானெல்லாம் நலிதல்மெலிவாக
கையைவிரித்தாரிந்தவேளையி லொன்றுமில்லையென்று
ஆனபடியினால்பிச்சைகொடுப்போம் ஏழைமனிதனுக்கு
என்றுமனதினிலெண்ணினானப்போ இருண்டபூதராசன்
அலியார்தன்னைக்கண்ணுற்கண்டு அப்போராசபூதம்
அடாபிச்சைக்காரா இங்கே யென்னிடம்வாவென்றான்
பிச்சைகேட்கவந்தமனிதனே யென்னிடம்வாவென்றான்
ஐயமெடுத்திடவந்தமனிதனே என்னிடம்வாவென்றான்
கருமந்தருகிறேனுங்களுக்கிப்போ சீக்கிரம்வாவென்றான்
பூதராசனழைத்ததேகண்டு பெரியோனலிபுலியார்
என்னவிதத்தால்நம்மையழைக்கிறா னிருண்டபெரும்பூதம்
என்னசொல்லிட நம்மையழைக்கிறா னிருண்டபெரும்பூதம்
என்னகேட்டிட நம்மையழைக்கிறா னிருண்டபெரும்பூதம்
கம்பனைப்பார்த்து ஆகிப்புலியார் கருத்தபூதராசன்
என்னவிதத்தாலழைக்கிறானம்மை நீபோய்க்கேளென்றார்
அந்தவார்த்தையைகாதிலேகேட்டு அப்போதுகம்பர்
பூதராஜன்கிட்டேபோயினார் பூதராசாவும்
தென்னங்காய்போல்பொன்னின்கட்டியே தேடியேகொடுத்தானும்
அந்தகட்டியேகையிலேவாங்கி கம்பர்தான்திரும்பி
பொன்னின்கட்டியே அலிப்புலிகையில் கொண்டுவந்துகொடுத்தார்
அந்தக்கட்டியேகையிலேவாங்கி அல்லாப்புலியாரும்
மெத்தெனவெங்கலத்தேர்மேல்போட்டார் வேங்கைபாதிபுலி
மெள்ளவெங்கலத்தேர்மேல்போட்டார் வேங்கைபாதிபுலி
மலைபோலுயர்ந்ததேர்மேல்போட்டார் மன்னாதிபுலி
பொன்னின்கட்டிதேர்மேல்விழவும் பொடிபொடியாய்த்தேரு
துண்டுதுண்டாய்முறிந்ததுவுயர்ந்தவெங்கலத்தேரு
மடமடவென்றுமுறிந்துவிழுந்தது வெங்கலத்தேரு
கடகடவென்றுமுறிந்துவிழுந்தது வெங்கலத்தேரு
பத்துவிருபதுதுண்டாய்விழுந்தது பாரப்பெருந்தேரு
குப்பலாகவிழுந்துபோச்சுது கொடியவெங்கலத்தேரு
தேருமுறிந்துவிழுந்திடக்கண்டு திகைத்துபூதராஜன்
என்னபுதுமையிருக்குதுவென்று இருண்டபூதராசன்
கையைத்தொடைமேலடித்துக்கொண்டான் கருத்தபூதராஜன்
மூக்கில்விரலையடுத்தினிலவைத்தான் முரட்டுப்பூதராசன்

மூன்பின்னிவனையாரினியறிவார்முறிந்துபோச்சுதேரு
கண்கள்சிவந்துபோச்சுதுவப்போ பூதராசனுக்கு
எட்டிப்பழம்போல்சிவந்ததுகண்கள் பூதராசாக்கு
மாதளப்பூப்போல்சிவந்ததுகண்கள் பூதராசாக்கு
மீசைபடபடவென்றுதுடித்தது பூதராசாக்கு
இனியில்லர்தகோபம்பிறந்தது பூதராசாக்கு
உருட்டிமிரட்டிப்பார்த்தானப்போ பூதராசாவும்
நெறநெறவென்றுபல்லைக்கடித்தான் பூதராசாவும்
மீசைமேல்கையைப்போட்டானப்போ பூதராசாவும்
மண்டிகால்போட்டுக்குந்தினனப்போ பூதராசாவும்
ஒரோஅடியினலடிப்பேனென்றான் பூதராசாவும்
தருமஞ்செய்யவந்ததுகரும மென்றான்ராசாவும்
பிச்சைநாம்கொடுத்தபலனுமென்றான் பூதராசாவும்
எழுபதுபாரதண்டாயுதத்தை எடுத்தான்கைதனிலே
ஆணவம்பேசிப்பல்லைக்கடித்து ஆங்காரங்கொண்டு
நெட்டைமலைபோல்கிட்டேயடுத்தான் நீண்டமுடிராசன்
ஆங்காரங்கொண்டுஓங்கியடித்தான் அல்லாபுலிமேலே
தயிரியங்கொண்டுஓங்கிஅடித்தான் அலியார்தலைமேலே
வீரியமாகஓங்கியடித்தான் அலியார்தலைமேலே
வாணிடிபோலேதூக்கியடித்தான் அலியார்தலைமேலே
தன்னிடபெலமெலாங்கூட்டியடித்தான் அலியார்தலைமேலே
அந்தஅடியினைதாங்கினாரலியர் இடதுகையாலே
ஓங்கிய அடியேதாங்கினாரலியா ரிடதுகையாலே
தண்டாயுதத்தைப்பிடித்துவளைத்தார் சூரபுலியலியார்
அவனுடகழுத்தினில்மாட்டினாரப்போ அல்லாப்புலியலியார்
மெள்ளவிழுத்தனர்பூதராசனை வங்கைப்புலியலியார்
பெரியமலைபோல்வளர்ந்தானப்போ பெரியராசபூதம்
மூங்கில்போல்வளைந்தானப்போ முரட்டுராசபூதம்
வில்லைப்போலவளைந்தானப்போ வெருண்டராசபூதம்
ஒரேகுத்தாகுத்தினாரலியார் உயர்ந்தநமதை
அந்தகுத்தினால்பூதராசன் அசந்துமடிந்துபோனான்
உடலினிலுள்ள எலும்புகளெல்லாம் நொறுங்கிப்போச்சுதப்போ
நெறநெறவென்று எலும்பில்லாமல் நிலத்திலேமோதிவீழ்ந்தான்
துண்டுதுண்டாய்முடிந்தான்பூத துரோகிராசாவும்
கண்டங்கண்டமாகக்கூண்டான் கருத்தராசாவும்
ஒரேகுப்பலாகுவிந்துமடிந்தான் பூதராசாவும

அலியார்குத்தியசத்தத்தாலே அந்தவேளையிலே
ஏழுபுவிகளுங்கிடுகிடுவென்ன எங்குமசைந்துபோச்சு
ஏழுவானமுங்கிடுகிடுவென்ன எல்லாமசைந்துபோச்சு
மலைகளெல்லாமடமடவென்று மரங்களசைந்துபோச்சு
தேருஓடிநததும்பூதமிறந்ததும் கண்டாரெல்லாரும்
மற்றுமுள்ளபூதமும்சின்களும் கண்டதுகண்ணாலே
இடுகிடுவென்றுநடுங்கிப்போச்சுது கால்கைவாராமல்
வறண்டுபோச்சுதுநீரில்லாமல் வாய்கள்தான்குழறி
அந்தவேளையில்புகுந்தாரலியார் தோப்பிற்குள்ளாக
கத்தியையுருவிக்கையிற்பிடித்தார் கத்தாஅலியல்லா
துண்டுதுண்டாய்வெட்டினாரப்போ பூதச்சேனைகளை
கண்டக்கண்டமாகவறுத்தார் கல்த்தபூதங்களை
கரும்பைநறுக்கும்போலேநறுக்கினார் சின்னின்படையோரே
வெள்ளரிக்காயைப்போல்அறுத்தாரப்போ வேங்கைப்புலியல்லா
வெட்டிவெட்டிவெளியேயெறிவந்தார் வெள்ளரிக்காயைப்போல்
பெரியமலைபோல்குவித்துப்போட்டார் பெரியோனலியல்லா
கிளைகள்பிடுங்கியெறியும்வாறாய் கிளையோடுமாய்த்தார்
ஒருபூதத்தைவெட்டாமல்விட்டார் ருடையோனலியல்லா
மற்றவையெல்லாமொன்றில்லாமல் மாய்த்துப்போட்டாரலியார்
அஸ்காப்மார்களின்காலில்போட்ட விலங்கைபொடித்துப்போட்டார்
எல்லாப்பேரையுமொன்றாய்ச்சேர்த்தன் றிறையோன்புலியல்லா
கட்டில்லாதசந்தோஷமானார் அஸ்காப்மாரெல்லாம்
சொல்லிடமுடியாச்சந்தோஷமானார் அசுகாப்மாரெல்லாம்

(அலிறலிஅல்லாகுமலுக்குராசனுக்குச்சேதிசொல்லியனுப்புதல்.)

வண்டுகள்பூவைச்சூழ்ந்தாப்போல வந்துசூழ்ந்துகொண்டார்
அசுகாப்மார்கள்தங்களை அலியார் ஆதரித்துக்கொண்டார்
கொல்லாமல்விட்டபூதமொன்றும் கிடுகிடுவெனநடுங்கி
காலுங்கையுமதிர்ந்திடப்பூதங் கண்கள்தான்பிதுங்க
முட்டிமோதிஅலிப்புலிகாலில் மோதித்தான்வீழ்ந்து
அண்ணனுமில்லைதம்பியுமில்லை ஆதிபுலியலியே
தாயுமில்லைதகப்பனுமில்லை சருதாரலியலியே
அக்காளில்லைதங்கச்சியில்லை அரசர்புலியலியே

வாருபற்றபரதேசிநானண்ணல்புலியலியே
உன்னுடவல்லமைநானறியாமல் கூடஓடிவந்தேன்
வெட்டாமலென்னைவிட்டுநீர்விட்டால் வெகுபலனுமக்குண்டு
புண்ணியமெத்தகிடைக்குமுமக்கு பெரியபுலியாரே
நன்மையுமெத்தகிடைக்குமுமக்கு நல்லஅலியாரே
இப்படிநானாவிதமாகக்கெஞ்சி அழுததுபெரும்பூதம்
பூதமழுகிறஅழுகையைக்கண்டு பெரியோன்புலியலிக்கு
மனமுமிரங்கிப்பூதத்தைப்பார்த்து மகாபூதமேகேள்
என்னுடசொற்படிநடப்பாயாகில் உனக்குப்பதவியுண்டு
உயிரோடுலகில்பின்னுஞ்சிலநாள் பிழைத்துநீயிருப்பாய்
இல்லாமற்போனாலொருவெட்டாலே யுன்னைவெட்டிடுவேன்
உயிரோடிருக்கமாட்டாய்நீயு முருண்டுஅழிந்துபோவாய்
என்றசொல்லதைக்காதிலேகேட்டு இருண்டபெரும்பூதம்
தங்கள்சொற்படிசெட்டுநடப்பேன் கொஞ்சமுந்தப்பாமல்
என்னையுந்திசொல்லிடுமையாஎன்றதுபெரும்பூதம்
அந்தவார்த்தையை அலியார்கேட்டு அடாபூதமேகேள்
உன்னுடராசன்முன்னாலசென்றுநீ ஒன்றுக்குமஞ்சாமல்
உங்கள்ராசனையெங்கள்நபி லுறுதியாய்வரச்சொல்லு
அப்படிவந்திடமாட்டேனென்றால் சண்டைக்குவரச்சொல்லு
அதற்கும்வாராமல்போனால்நானும் அங்கேவந்திடுவேன்
வந்தேனைவில்லாளுக்கிறையா யெல்லாரையுங்கொடுப்பேன்
இரத்தஆறுகள்ஓடச்செய்வேன் இந்தசேதிகளை
அலியார்சொல்லிடவொன்றுநீசொல்லிடு கொஞ்சமுமஞ்சாமல்
என்றசொல்லைக்காதிலேகேட்டு இருண்டபெரும்பூதம்
வேங்கைப்புலியேவல்லமைக்கடலே வெற்றிமன்னவரே
உங்கள்பெருமையோர்சமூனையெல்லாஞ்சொல்லிடுவேன்
தங்கள்வல்லமைசங்கதிமுழுதுந் தவறாமற்சொல்வேன்
என்றுபாதத்தில்மோதிவீழ்ந்தது இருண்டபூதமது
அப்போதலியார்விடையுங்கொடுத்தார் அந்தபூதத்துக்கு
அஸ்காப்மார்கள்தங்களைசேர்த்து அப்போதலியாரும்
சந்தோஷமாகதோப்பதைவிட்டுசகலபேரோடும்
மக்கமாநகரைநாடியேவந்தார் மகாசிங்கம்போல
பள்ளியில்வந்துநன்னபிபதத்தை பணிந்தாரலியாரும்
அந்தவேளையில்பொழுதும்போச்சுது அப்போநபியுல்லா
சந்தோஷமாகதொழுதுமுடித்தார் நாயகநபியுல்லா

அவரவர்வீட்டுக்குபோனாரெல்லாம் அதிகமகிழ்வாக

(மலுக்குராசனுக்குபூதம்போய்ச்சொல்லுதல்.)

அலியாரனுப்பியபூதம்தானது அழுதுமிகவாடி
ஆயாசமெனமேல்பொங்கிடசலித்து அதிகமெலிவாகி
தன்கிளையோர்களியாவையுமிழந்து தனியாய்த்தான்தனித்து
சஞ்சலத்தோடுமலைகளாறுகள்தன்னை தாண்டி தாண்டி
இப்படிசிலநாள்வரைக்கும்நடந்து சிந்தைமிகவாடி
சொல்லிடமுடியாமகரிபுபட்டணம் சேரதானடந்து
மலைபோலுயர்ந்தசுற்றுமதிலையும் வாகாதான்கடந்து
நீண்டவீதிபுள்புகுந்துநடந்தது விசனமிகபொங்க
மாடகூடங்களெல்லாமதாண்டி மனதுசலிப்பாகி
முன்னூறுமாமுழமாசனிருக்கு மாணிக்கக்கொலுமுன்னே
தோரணங்கட்டியஇடங்களுந்தாண்டி சிம்மாதனமுன்பாய்
மலைபோல்கொலுமேல்குந்தியிருக்கிறான் மலுக்குமகாராசன்
பூதப்படைகளும்சுற்றியிருநதது கொலுவின்முன்னாக
ஜின்னின்படைகளும்சுற்றியிருந்தது கொலுவின்முன்பாக
றூமிபடைகளும்சுற்றியிருந்தன ராசன்கொலுமுன்னே
சங்கிப்படைகளுஞ்சுற்றியிருந்தன ராசன்கொலுமுன்னே
துருக்கிப்படைகளுஞ்சூழ்ந்துவிருந்தனராசன்கொலுமுன்னே
மந்திரிமார்களுமருகினிலிருக்க மலுக்குமகாராஜன்
தந்திரிமார்களுமருகினிலிருகக மலுக்குமகாராசன்
சநதோஷமாகசிம்மாதனத்தில் சகலபடைசூழ
அந்தசமயத்தில்அலியாரனுப்பிய பூதமிகவாடி
கொலுமுன்னாகராசனைக்கண்டு பாதம்பணியாமல்
வெட்டியமரம்போல்முன்பினில்நின்று விம்மிவிம்மிபதறி
கண்ணீர்விட்டுஅழுதுநின்றது கனத்தபெரும்பூதம்
குலுங்கிக்குலுங்கியழுதுநின்றது கொடியபெரும்பூதம்
வந்துஅழுகிறபூதத்தைபார்த்து மாமலுக்குராஜன்
என்னவிதத்தால்தனியாவந்தது ஏனழுகிறாய்பூதம்
என்னகாரணமேதுகாரண மறியேவாமென்றெண்ணி
கோடையிடிபோல்பூதத்தைப்பார்த்து கொடியமலுக்குராசன்
பெரியக்கடல்போல்சேனைகளோடு போனாய்பூதமேநீ
அத்தனைபூதப்படைகளைவிட்டு அழுகிறவிதமென்ன
தனியாய்வந்தகாரணமென்ன சொல்லென்றுகேட்டான்

அந்தசொல்லேபூதமுங்கேட்டு அலியேதானினைத்து
கிடுகிடுவென்றுபயந்துபோனது கொடியபெரும்பூதம்
எங்களையாளும்ராசாவேநான் எல்லாஞ்சொல்லுகிறேன்
சொல்லிடநாவும்வரவேயில்லை துலங்குமுடிமன்னா
என்னவிதமாய்சொல்வேனுனக்கு என்றான்பெரும்பூதம்
அந்தசொல்லேகாதிலேகேட்டு அப்போமலுக்குராசன்
ஆனலாகட்டுஞ்சொல்லிடுவென்றான் அப்போபூதஞ்சொல்லும்
ராசருக்கெல்லாம்ராசனுகிய ராசாவேகேளும்
நாங்களுமக்கமாகாஞ்சேர்ந்தோம் ராசாதிராசாவே
வந்தார்சண்டைக்கிஆயிரம்பேர்கள் வல்லமைமிகபேசி
அவர்களையடித்துவிலங்குகள்போட்டான் அதன்பின்சண்டைக்கி
நாலாயிரம்பேர்வந்தாரவர்களை நறுக்கினான்மீந்தோர்க்கு
காலுக்குவிலங்குபோட்டானதன்பின் கனத்தப்படையாக
பத்தாயிரம்பேர்வந்தாரவர்களை பாரஅடியாலே
பகுதியேவதைத்துமீந்தபேருக்கு போட்டான்கால்விலங்கு
நாலாந்தரமும்ரெண்டாயிரம்பேர் வந்தார்சண்டைக்கி
அதிலொருவீரியனிருந்தானவனை யடித்தான்தலையொடிய
அவர்கள்காலுக்கும்விலங்குகள்போட்டு அடைத்தான்சிறைக்குள்ளே
நாலுத்தரமுமிப்படிசண்டைநடந்ததுராசாவே
அலியார்சண்டைக்கித்தான்வாராம லனுப்பிவித்தப்படையாம்
அஞ்சாமுறையில்சண்டைகள்செய்திட அலியார்தான்வந்தார்
அவரலியாரென்றறியாபோனுன் பூதராசாவும்
பிச்சைக்காரன்போலவேவந்தார் பெரியஅலியாரும்
சம்மாவேளையில்அலியார்வலியை சூராதியார்கள்
சண்டைகளத்தில்அலியின்வலுமையை சிப்பாய்மாரறிவார்
வெட்டிடும்போதுஅலியார்வலுமையை வீராறிவார்கள்
செத்திடமாண்டிடும்போதுவலுமையை சேவகமாறறிவார்
உலகினிலவருடவலுமையறிவோரொருவருந்தானில்லை
உலகமுழுதுமதிர்ந்திடும்சண்டையில் கிடுகிடுவென்ன
ஆங்காரமுள்ளவர்வல்லமையுள்ளவர் அல்லாப்புலியலியாம்
(அவர்) குட்டையுமல்லநெட்டையுமல்ல குணமுள்ளவர்காண்
பருத்தவரல்லமெருத்தவரல்ல பஞ்சைபோலவராம்
சேனைப்படையொடுவரவேயில்லை தனியாவந்தார்காண்
யானைகுதிரையின்படைகளுமில்லை யான்சொல்லக்கேளு
வீரியம்பேசிவந்தவரல்ல வேங்கைபுலியாலி

குதிரைமேலேறியும்வந்திடவில்லை கொற்றபுலிஆலி
கத்தியைகையில்பிடித்தவரல்ல கனத்தபுலியாலி
கூட ஒருஆள்தன்னையழைத்தவர் கூட்டிநடந்துவந்தார்
நாங்களிறங்கியிருக்கிறவிடத்துக்கு நல்லவர்போல்வந்தார்
வந்தவர்தன்னைக்கண்டான்பூத வல்லராசாவும்
பிச்சைக்கேட்கவந்தவனென்று புந்திமிகவிறங்கி
கட்டிப்பொன்னை கையிலேகொடுத்தான் கனத்தபூதராசன்
அந்தகட்டியேகையிலேவாங்கி யடித்தார்த்தோமேலே
மெத்தெனவெறியவெங்கலத்தேரது முறிந்ததுதுண்டாக
குப்பலாகக்குவிந்துபோச்சுது கொடியவெங்கலத்தேரு
பத்துவிருபதுஆயிரந்துண்டாய்ப் பொடியாய்த்தான்போச்சு
தேருமுறிந்திடபூதராசாக்கு சிவந்துபோச்சுக்கண்கள்
கோபங்கொண்டுதண்டாயுதத்தைக் கொண்டான்கைதனிலே
ஓங்கியடித்தான் அலியார்தலைமேல் சுமந்தபேரடியாய்
அந்தஅடியைகையிலேபிடித்து ஆதிப்புலியலியார்
வளையல்போலதண்டத்தைவளைத்து மாட்டினாரவன்கழுத்தில்
இழுத்துவளைத்தொருகுத்துகுத்தினா ரெலும்புகள்தானொறுங்க
அந்தகுத்தினால்செத்தான்பூத ராசாவானாலும்
செத்தபின்தோப்பினுள்புகுந்தார் சீறிபுலிபோல
ஆட்டுக்குலத்தினுள்புலிபூந்தாப்போலபுகுந்தாரலிபுலியார்
கொக்குகுலத்தினுள்ராஜாளிபோல் புகுந்தாரலிபுலியார்
துண்டுதுண்டாவெட்டியெறிந்தார் பூதசேனைகளை
என்னைமாத்திரம்வெட்டாவிட்டா ரேழையானடியேன்
என்னைப்பார்த்தொருசேதியுஞ்சொன்னா ரேக்ன்புலியலியார்
உன்றன்ராஜன்முன்பினில்சென்று ஒன்றுமறைக்காமல்
என்னுடசேதிகள்முழுதுஞ்சொல்லிடு ஒன்றுக்குமஞ்சாமல்
எங்கள்தீனில்ராசனைவரச்சொல் வாராமல்போனால்
வந்துநான்கொல்வேனென்றுசொல்லிடு வார்த்தைபிசகாமல்
அப்படிநீயும்சொல்லாமல்போனா லறுப்பேன்தலையையென்றார்
என்னையாளும்ராசகெம்பீரா ராசாவேகேளும்
அலியாரிங்கேவருவாராகி லவரைவெல்லமாட்டோம்
அல்லதவரோடெதிர்ப்பவர் யாருமில்லையிவ்வுலகில்
சொல்லியபடியேசெய்வாரல்லது தோற்றுப்போகமாட்டார்
சேதிகளெல்லாமுமக்குச்சொல்லினேன் ராசாமாமலுக்கே

(மலுக்குராசன்சொல்லுதல்.)

பைத்தியங்கொண்டபூதமேகேளு பயந்துவந்தவனே

அளவில்லாதபடையொடுசென்று அடிப்பட்டவெறியா
கட்டில்லாதபடையுடன்சென்று கட்டுபட்டமடையா
சின்னமனிதன்கைவாட்கிரையான சீருகெட்டவனே
பஞ்சைமனிதனைவல்லவனென்று பகர்ந்தாயென்முன்னே
எளியோர்நாம்பள்வல்லமையில்லா தெதிர்க்கமாட்டோமென்றும்
சூரன்தீரன்வீரனவனென சொன்னாயஞ்சாமல்
வாயாலூதினால்பஞ்சாய்ப்பறப்போன் வலிமைசாலியென்றாய்
என்கைவில்லினையெடுத்திடுவாரா என்னைக்கெலிப்பாரா
தண்டாயுதத்தைப்பூமியைவிட்டு எடுப்பவர்தானுண்டோ

இப்படிநானாவிதமாபேசி ராசாமாமலுக்கு
கிலுகிலுவென்றுசிரித்தானையா ராசாமாமலுக்கு
பளபளவென்றுசிரித்தானையா ராசாமாமலுக்கு
மந்திரிமார்கள்தங்களைப்பார்த்து யோசனைகேட்டானும்
தந்திரிமார்கள்தங்களைப்பார்த்து தயிரியங்கேட்டானும்
என்னயோசனைசொல்லுங்களென்றான் ராசாமாமலுக்கு
சூட்சமிதற்குச்சொல்லுங்களென்றான் ராசாமாமலுக்கு
சண்டைக்குப்போவரின்னாரென்று சொல்லுங்களெனக்கேட்டான்
அலியின்தலையையறுத்துவருபவர் யாரென்றுகேட்டான்
புலியின்தலையைகொண்டுவந்திட போரவர்யாரென்றான்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அதிலேயொருவீரன்
சங்கிபடைக்குத்தலைவனாகிய சங்கிராசாவும்
இருநூற்றிமுப்பதுமுழத்தான் ஜங்கியெழுந்தானப்போது
மன்னோர்க்கெல்லாமன்னவனாகிய ராசாமாமலுக்கே
அளவில்லாதபடையினையுடைய ராசாமாமலுக்கே
எண்ணிக்கையில்லாப்படையினையுடைய ராசாமாமலுக்கே
ஈதொருபெரியவேலையாய்நினைத்தாய் ராசாமாமலுக்கே
ஒருநொடிப்பொழுதினிலழித்துநான்வருவேன் ராசாமாமலுக்கே
கண்ணையுருட்டிப்பார்ப்பேனாகில் கர்ப்பங்கலங்கிப்போகும்
உருட்டிமிரட்டிப்பார்ப்பேனாகி லுலகமிரண்டுபோகும்
அப்படியிருக்கப்பூதப்படைகளை அறுத்துப்போட்டானும்
அத்தனை ஆணவமுள்ளவனா அலி ஆனாலாகட்டும்
அவனையொருகைநான்பார்த்திடுவேனையாராசாவே
அலியின்தலையை அறுத்துநான்வருவேனையாராசாவே
பெண்டுபிள்ளைகளைச்சிறைபாய்ப்பிடிப்பேனையாராசாவே
மக்கத்தைப்பிடித்துக்கைவசமாக்குவேனையாராசாவே

கோட்டையிடித்துத்தூளாய்ச்செய்வேனையாராசாவே
இப்படிநானுவிதமாபந்தய மிசைத்தான்ராசாக்கு
அந்தசொல்லைக்காதிலேகேட்டு ராசாமாமலுக்கு
சந்தோஷம்பொங்கிப்பூரிப்பாச்சுது ராசாக்கானாலும்
கட்டிலடங்காமகிழ்ச்சியாச்சுது ராசாக்கானாலும்
சங்கிபடைக்குத்தலைவனாகிய சங்கிராசனேகேள்
சொல்லிபபடிநீசெய்வாயாகில் சங்கிராசனேகேள்
சீமையில்பாதிதருவேனுனக்கு திரவியமுந்தருவேன்
யானைப்படையுந்தருவேனுனக்கு அடாசங்கிராசா
குதிரைப்படையுந்தருவேனுனக்கு கொண்டுவேருவாயானால்
காலாள்படையுந்தருவேனுனக்கு கணக்குகளில்லாமல்
அளவில்லாதபணமுந்தருவேன் அலியேகொண்டுவந்தால்
வேண்டியதெல்லாமுனக்குத்தருவேன் வெற்றிபெற்றுக்கால்
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு அப்போசங்கிராசன்
என்னையாளும்ராசாவேகேள் மலுக்குராசாவே
இத்தனை தூரம்நீசொல்லிடவேண்டாம ராசாமாமலுக்கே
இவ்வளவரைக்குஞ்சொல்லநீவேண்டாம் ராசாமாமலுக்கே
உன்னுடஅடியனாயிருக்கிறேனானும் ராசாமாமலுக்கே
உன்சொல்படிநானுயிர்கொடுப்பேன் ராசாமாமலுக்கே
சண்டைக்குப்போய்நான்வந்தபின்பு ராசர்மாமலுக்கே
வேண்டியதெல்லாங்கோடுப்பாயெனக்கு ராசாமாமலுக்கே
இப்போதொன்றும்நான்பேசிடமாட்டேன் ராசாமாமலுக்கே
கேட்பவையெல்லாம்வந்துகேட்குவேன் ராசாமாமலுக்கே
கெலித்துவருவேனாகில்பேசுவேன் ரர்சாமாமலுக்கே
என்றசொல்லைக்காதிலேகேட்டு ராசாமாமலுக்கு
நல்லதுநல்லதுசங்கிராசனே நான்சொல்லக்கேளு
சீக்கிரமாகநீவீட்டுக்குப்போய்வா சங்கிராசாவே
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு அப்போகொடியசங்கி
தெண்டஞ்செய்துவீட்டுக்குப்போனான் சங்கிராசாவும்

(ஜங்கிராசன்மக்கம்போகுதல்.)

இருநூறுமுப்பதுமுழத்தான் எழுந்தான்மலைபோல
வீட்டுக்குப்போனான்போசனமுண்ண விரும்பிசங்கிராசன்
அரிசிகலம்நூறுக்கிடச்சொன்னான் ஆடுவறுபதுமாம்
ஒட்டகைநாற்பதும்சமைத்திடச்சொன்னான் ஜெருவேலைதின்ன

அந்தப்படியேசமையலுமாச்சுது அரைநொடிக்குள்ளாக்
சமைத்ததைவயெல்லாமுண்டானையா சங்கிராசாவும்
சந்தனம்பன்னீர்வாரிப்பூசினான் சண்டாளன்மார்மேல்
எழுபாரமாலையைக்கழுத்தி லிட்டானப்போது
எழுபதுபாரந்தண்டாயுதத்தை யெடுத்தான்கைதனிலே
முப்பதுபாரகத்தியேயெடுத்து இடுப்பில்கட்டினானே
நாற்பதுபாரவில்லினையெடுத்து போட்டான்தோள்மேலே
மற்றவாயுதமெல்லாமெடுத்தான் மகாசங்கிராசன்
வீட்டைவிட்டுவெளியேவந்தான் பெரியமலைபோல்
மலுக்குராசன்முன்னில்நின்றான் மலைபோலசங்கி
சங்கிவந்ததைராசனுங்கண்டு சந்தோஷமானான்
சங்கிப்படையோர்தன்னையழைத்து சொன்னான்மாமலுக்கு
கணக்கில்லாதசங்கிப்படைகளைக் கொடுத்தான்மாமலுக்கு
அளவில்லாதசங்கிப்படைகளை யழைத்தான்மாமலுக்கு
சங்கிப்படைகளேநீங்களுங்கூட சீக்கிரமாப்போங்கள்
அந்தச்சொல்லைக்காதிலேகேட்டு சங்கிப்படையோர்கள்
ஆயுதமெல்லாமெடுத்துப்பூட்டி ஆரம்பித்தாரெல்லாம்
கத்திகளெடுத்தார்தண்டமெடுத்தார் கனத்தசண்டைக்கு
ஈட்டிகளெடுத்தார்சக்கரமெடுத்தா ரெல்லோருங்கூடி
அம்புகளெடுத்தார்சுற்றுகத்தியும் ஆயுதங்களெடுத்தார்
சண்டைக்குப்போகக்கூடினரெல்லாம் சங்கிப்படையோர்கள்
அந்தவேளையில்சங்கிராசனும் ஆணவமிகப்பேசி
சண்டைக்குப்போகராசனிடத்தில் தானும்விடைவாங்கி
கண்டபேரண்டபட்சிமேலேறினான் கனத்தசத்தமிட்டு
பட்டணம்விட்டுப்புறப்பட்டானும் படைகள்தான்சூழ
துந்துமிபம்பைகள்தானமுழங்கிட தொனிசெய்யுங்கடல்போல
பேரிகைசச்சரிசின்னமுழங்கிட பெரியபடைசேனை
காடுமலைகளெல்லாந்தாண்டி கடிகநடந்தார்கள்
ஆறுகுளங்கள்பலதுந்தாண்டி அணியணியாநடந்து
பக்கமடுக்காதவழியில் வந்துவிறங்கினார்கள்
மயிதானத்தில்வந்துவிறங்கினர் மகாகடல்போல
மட்டிலடங்காகூடாரங்களை மலைபோலடித்தார்கள்
கணக்கில்லாதகூடாரங்களை கண்டமட்டுமடித்தார்
அணியணியாககூடாரத்தை அடித்தார்கதுகமும்
ஜேஜேயென்றிடச்சங்கிப்படையோர் செறிந்தாரெல்லோரும்
கட்டிலடங்காச்சந்தோஷமானார் கனத்தசங்கியர்கள்

அந்தவிடத்தில்மக்கத்தார்களின் ஒட்டகந்தனைமேய்த்து
இருந்தார்ஸ்காப்பவ்விடமொருவர் அன்சாரியென்பேர்
வந்தபடைகளைக்கண்ணாலேகண்டு பயந்துநடுங்கிபோனார்
இடிக்கிடிவென்றுகைகால்பதறிட கிடுகலங்கிபோனார்
மலைபோலிருக்கிறபேர்களைக்கண்டு மயங்கிவாடிபோனார்
கன்னங்கரேலென்றிருப்பதைக்கண்டு கலங்கியாடிபோனார்
சுவற்றிலெழுதியசித்திரம்போல சோர்ந்துவாடிநின்றார்
அந்தவேளையில்ராசாசங்கி அவ்விடந்தான்மேயும்
ஒட்டகையெல்லாவகையாய்ப்பிடித்து ஒவ்வொருஒட்டகமாய்
பொழுதுக்குக்காட்டிவிழுங்கிப்போட்டான் பெரியசங்கிராசன்
சின்னஎரியின் தண்ணீர்முழுதும் சேறெடுத்தான் குடித்தான்
அந்தபுதுமையசகண்ணாலேகண்டு அன்சாரியென்பேர்
தன்னையும்பிடித்துத்தின்பானென்று சஞ்சலமிகவாகி
அவ்விடமிருக்கமனதில்லையமாய் அன்சாரியென்பேர்
ஓரேயோட்டமாமக்கத்தைநாடி ஓடிஓடிவந்தார்
தப்பிப்போனோமவன்கையில் சஞ்சலமாகாமல்
என்றுநினைத்துஒரேஓட்டமா வந்தார்மக்கநகர்
பள்ளிக்குச்சென்றுநபியுல்லாவின் பாதந்தனைப்போற்றி
வள்ளல்நபியேவசீசைதனைத்த வேதக்கடலாரே
நாகப்பாம்பொடுவழியினில்பேசிய நபினார்முகம்மதரே
வழியில்புலியொடுநன்மொழிபேசிய வல்லோன்றிருத்தூதே
நாகப்பாம்பையொருமுழக்கோலடித்தநன்னபியே
சொல்லிடநாவுமவாவில்லையெனக்கு தூயநன்னபியே
கருமலைபோலகூட்டமும்வந்தொரு காதவழிக்குள்ளே
இறங்கியேபடங்குகளடித்தாரெங்கும் ஏகமாமலைபோல
ஒவ்வொருமலைபோலிருக்கிறொருவர் உடல்கள்பெருத்தவராய்
அதிலொருகலைவனிருக்கிறானபியே அவனையுநான்பார்த்தேன்
கண்டவுடன்கிடுகலங்கிப்போனேன் கைகால்வாராமல்
நாம்மேயவிட்டஒட்டகமெல்லாம் நபியேநீர்கேளும்
காபர்கள்எலிதனைநெருப்பினில்சுட்டு எடுத்துத்தின்பதுபோல்
பொழுதுக்குக்காட்டிஒவ்வொருஒட்டக மாகப்புசித்துவிட்டான்
அங்கொருஎரியின்தண்ணீர்வற்றிட அவ்வளவுங்குடித்தான்
என்னசொல்வேனதுசொல்வே னிறசூல்நன்னபியே
இன்னேபெரியோபூதமோதேவோ தெரியாதெனக்கு

அவனோடெதிர்க்கயாரால்முடியும் அப்படிப்பட்டவன்காண்

(அலியார்சங்கிராசனைக்கொல்லப்போகுதல்)

அந்தசொல்லைக்காதிலேகேட்டு அகம்மதுநபியுல்லா
என்னச்சொன்னீரேதுசொன்னீ ரொன்றுமறியீரோ
முன்னால்பூதப்படைகளையனுப்பிய மலுக்குமுலுக்குராசன்
பின்னும்சண்டைக்குசங்கிபடைகளை பெரிதாயனுப்புவித்தான்
ஆகையாலினிநாமெதிராதிருந்தா லிங்குவரத்துணிவான்
என்றுமுகம்மதுநபியுல்லாவும் சொன்னாரப்போது
அந்தவார்த்தைதனைக்காதிலேகேட்டு அங்கேவேளையிலே
வேங்கையாலிபுலியாரெழுந்து விண்ணுவரப்போது
நாயன்றாதேகவமணியான நபிகள்நாயகமே
அல்லாறகமத்துச்செய்வானுகி லவனொருபார்மல
பொல்லாத்துஷ்டன்போக்கிரியானவன் பெரியெனென்றுலிவுன்னோன்
கல்லின்மனதான்கசடுநிறைந்தவன் கடைகெட்டப்பாவி
அவனையடக்கிடவென்னையனுப்பிடும் அல்லாவருள்னாதே
சண்டைசெய்துநான்கெலித்துவருகிறேன் சல்லல்லாநபியே
வெற்றிபெற்றுநான்வென்றுவருகிறேன் வேதாம்பர்நபியே
அடியேன்றனக்குவிடைநீர்தாரும அல்லாயிறசூலே
என்றவார்த்தைதனைக்காதிலேகேட்டு இறசூல்நபியுல்லா
வெற்றியும்வலிமையுங்கொடுப்பானல்லா வெல்லபோருமென்றார்
அந்தவார்த்தைதனைக்காதிலேகேட்டு ஆதிஅலியுல்லா
சந்தோஷமானார்சண்டைகளுக்குப்போக சருதாரலியுல்லா
கத்தியையெடுத்துக்கையில்பிடித்தார் கத்தாஅலியுல்லா
மலைகளைத்துண்டுதுண்டாகபிளந்திடும் வல்லகுல்பக்கார்
கற்களைத்துண்டந்துண்டமாக்கிடும் கனத்தகல்பக்கார்
பூமியையிரண்டாய்ப்பிளந்திடும்வல்ல பெரியகல்பக்கார்
அந்தகத்தியைக்கையில்பிடித்தா ரல்லாபுலியுல்லா
அரசர்தலைகளைகாலால்மிதித்திடும் ஆணவமுள்ளதுல்துல்
அண்டகோளத்தைவெட்டிபறந்திடும ஆங்காரமுள்ளதுல்துல்
யானைகள்தலையைக்காலால்மிதிக்கும் வீரியமுள்ளதுல்துல்
குதிரைகள்தலையைகூசாமல்மிதிக்கும் கொற்றவர்மாதுல்துல்
அந்தகுதிரையைசிங்காரித்தார் ஆண்மையுளகம்பர்
சேணமுமெடுத்துக்கட்டினாரப்போ சிங்கவலிகம்பர்

காலுக்குத்தண்டையும்போட்டாரப்போ கனத்தமுடிகம்பர்
கடிவாளமுமெடுத்துப்போட்டனர் கனத்தவலிகம்பர்
குதிரையைபிடித்துவந்தார்கம்பர் அலிப்புலிதன்கிட்டே
அப்போதலியார்ஆதியைநினைத்து ஆங்காரமுஸ்அலிசமேல்
வீரியஅலியார்குதிரைமேலேறினா ரங்கேரவேளையிலே
வானமும்நடுங்கின பூமியுநடுங்கினமலையுநடுங்கினவாம்
கடலுமநடுங்கின கல்களுநடுங்கின காடும்நடுங்கினவாம்
புலியுமநடுங்கின அரியுமநடுங்கின பூமிதனிலுள்ள
பலபலபடைப்புகளெல்லாம்நடுங்கின பராக்கியாலே
கைபருமொக்கடந்தாரப்போ அலியார்தன்கூட
காற்றைப்பறந்துபோகுது துல்துல் கனத்தபடையோடி
வேகமாபறந்துபோகுது துல்துல் வெள்ளப்படையோடி
செந்தூளெழுந்துபறக்குது. திசைகள்ஒன்றுந்தெரியாமல்
கருந்தூளெழுந்துபறக்குதப்போ ககனந்தெரியாமல்
விண்ணுமறைந்துபோச்சுதுவப்போ குதிரைவினாவாலே
காடுவனமெல்லாந்தாண்டிகடந்தார் கத்தாஅலிபுலியார்
மாடகூடங்களைவிட்டுகடந்தார் வல்லஅலிபுலியார்
ஏரிஆறுகள்தாண்டிகடந்தார் ஏகஅலிப்புலியார்
குளங்களருவிகளெல்லாங்கடந்தார் கொற்றவரலிபுலியார்
இப்படிதாண்டிப்போனார்சங்கி யிருக்குமிடமாக
அந்தவேளையிலவனுடபட்சி அக்கோட்டந்தனிலே
பெரியமலைபோல்மேய்ந்துவிருந்தது பெலக்காரமுளபட்சி
அந்தபட்சியேகண்ணுற்கண்டார் அல்லாப்புலியவரே
அந்தவேளையில்அலியார்வருவதை கண்டான்சங்கியவன்
நம்முடபட்சிக்கிரையிவனென்று நினைத்தான்சங்கியவன்
பட்சியேபார்த்துசொன்னானப்போ பாரசங்கிராசன்
அதோவருகிறபேர்களைபிடித்து கொத்திவிழுங்கென்றான்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அந்தபட்சியது
கொத்திவிழுங்கிடப்பறந்ததுபட்சி கொற்றவரலிகிட்டே
பட்சிபறந்துவருவதைகண்டார் பாரஅலியல்லா
அலிப்புலிகிட்டேநடந்துவந்தது கொத்திதான்விழுங்க
வாயைத்திறந்துகொத்திடவென்று வல்லபட்சியது
அந்தவேளையிலென்னசெய்தார் வல்லஅலியல்லா
கத்தியையுருவிவெட்டினார்வாய்மேல் கனத்தஇடிபோல
அந்தவெட்டிலிரண்டுதுண்டாய்வீழ்ந்ததுபட்சியது

பெரியமலைபோல்கீழேவிழுந்தது பெலமுளபறவையது
வெள்ளரிக்காய்போல்விரிந்துபோச்சுது ஓரேவெட்டாலே
பட்சிபிறந்திடக்கண்டான்சங்கி பதறிதானெழுந்து
பல்லைநெறநெறவென்னகடித்தான் பாரசங்கிராசன்
கண்களிரண்டுஞ்சிவந்துபோச்சுது சங்கிக்கானாலும்
எட்டிப்பழம்போல்சிவந்துபோச்சுது இரண்டுகண்ணுமப்போ
உதட்டைப்பல்லாற்கடித்துக்கொண்டான் உற்றசங்கிராசன்
எழுபதுபாரதண்டாயுதத்தையெடுத்தான் கைதனிலே
சீறிநடந்தான்அலியார்கிட்டே சீக்கிரமாசங்கி
குதிரைமேலிருக்கும்அலியார்தன்னை பெலமெலாந்தான்கூட்டி
ஓங்கியோரடிவிம்மியடித்தானங்காரங்கொண்டு
அந்தஅடியேகையிலேதாங்கினார் அலியாரந்நேரம்
தாங்கிடவிரண்டுதுண்டாய்முறிந்தது தண்டாயுதமப்போ
மலைமேலவ்வடிவிழுமேயானால் மலையும்பொடியாகும்
மாமேலவ்வடிவிழுமேயானால் மாமெல்லாமுறியும்
ஆணவியாகிப்படியாலடியே அலியார்தாங்கினார்காண்
மற்றபோல்முடியாதவ்வடி வலியே தான்தாங்க
அந்தபுதுமையைக்கண்ணாற்கண்டு அப்போசங்கிராசன்
இப்படிப்பட்டவல்லமையோர்களெவருமுலகிலில்லை
இதுநாளவரைக்குங்கண்டதேயில்லை யென்றுசங்கிராசன்
தன்னுடவிரலைமூக்கின்மேல்வைத்தான் தயிரியந்தான்செய்து
என்னுடபட்சியோரண்டாவெட்டினை யேயோகுலத்தானே
தண்டாயுதத்தைமுறிந்திடச்செய்தாயிசனல்நீயின்று
வல்லமைக்காரனாயினையென்று கொஞ்சமுமெண்ணாதே
ஆனாலாகட்டுமுன்பெயரென்ன எனக்குச்சொல்லுமென்றான்
அந்தவார்த்தையேகாதிலேகேட்டு ஆதிப்புலியல்லா
மக்கமாநகராளுமுகம்மது மருகரானவர்நான்
திக்குதிசைகளெல்லாமஞ்சிடசண்டைசெய்பவர்தான்
உன்னையுமுன்குலராசனைவெட்டு மலிப்புலிகாணென்றார்
அந்தசொல்லைகாதிலேகேட்டு அப்போதசங்கி
சின்னநெடுபூதகணங்களைவெட்டிய சூரஅலியிவராம்
ஆனாலாகட்டும்பார்ப்போமொருகை அலியாரவல்லமையே
என்றுமனதிலுள்ளெண்ணினான்சங்கி அலியாராசாவும்
அந்தவேளையில்லென்னசொல்கிறான் அலியார்முகம்பார்த்து
என்னைக்கெலித்திடத்துணிந்துநீவந்தாயேனமானிடனே
பஞ்சசனத்திற்பிறந்தவனின்னம் பயமுழுளனவனீ

என்னுடவல்லமையிவ்வளவென்று என்னதேயும்
உன்னைக்கெலித்திடவந்தவனுந்து மூருதனைப்பிடிக்க
என்னைக்கெலித்திடுங்கெட்டிக்காரனாகவிருந்தாக்கால்
வாளாயசெய்திடுவல்லமையறிந்திட வாவென்று சொன்னான்
அந்தமொழியேகாதிலேகேட்டு அப்போதலியாரும்
நல்லதுநல்லதுஉன்சொற்படியே நானும்சம்மதியே
எப்படிஎப்படிசண்டைகள்செய்திட உனக்குசம்மதியோ
அப்படியெல்லாம்சண்டைகள்செய்திடு அறிவில்லாசகி
என்றுஅலியார்கையிலெடுத்தார் நிலைகுன்றுசல்பக்கார
என்பதுபாரகத்தியைகையி லெடுத்தான்சங்கிராசன்
கத்தியாலோங்கிவெட்டிடுனைலியே கனைத்தபெரியவெட்டு
அந்தவெட்டைத்தாங்கினாரலியார் சுல்பக்காரவாளால்
இரண்டுதுண்டாய்வாளுமுறிந்தது வீழ்ந்ததுதரைமேலே
கத்திமுறிந்துவீழ்ந்திடசங்கி கண்கள்நெருப்பாகி
பல்லைநெறநெறவென்றுகடித்தான் பாதகனானசங்கி
முன்னல்பட்சிதன்னைவனைததான் முறித்தான்தண்டமதை
பின்னுமுகத்தினைமுறித்தாரென்று பெரியகோபமானன்
அந்தவேளையிலசிவந்ததுகண்கள் சங்கிராசாக்கு
அந்தவேளையிலென்னசொல்கிறான்சங்கிராசாவும்
ஆண்மையுள்ளஅலியேயானாலென்சொல்லைக்கேளு
கெட்டிக்காரஅலிநீயானால் என்சொல்லைக்கேளும்
குதிரையைவிட்டுக்கீழேயிறங்கி கைசண்டைசெய்யும்
பரியைவிட்டுக்கீழேயிறங்கி பாரசண்டைசெய்யும்
உன்னுடவல்லமைகளெல்லாங்காட்டிடு ஒன்றுமறைக்காமல்
அந்தவார்த்தையேகாதிலேகேட்டு அப்போதலியாரும்
நாகுங்குடியாய்ப்புகுந்திடும்பரிசியே நான்சொல்லக்கேளு
எப்படியெப்படியுன்மனமென்னுதோ அப்படியெல்லாஞ்செய்
உன்மனசம்மதிபடியேசம்மதியெனக்கு மென்றுசொல்லி
ஏறியிருந்திடும்துல்துலைவிட்டு இறங்கினாரப்போது
மலைபோனின்றசங்கிராசன்முன் வந்தாரலியாரும்
சண்டைக்கிவாவென்கூப்பிட்டசங்கிமுன் வந்தாரலியாரும்
இட்டேயலியார்சந்திடசங்கியைக்கொண்டுறமாபிடித்து
அலியேபூமிமேல்தள்ளிடநாடி அப்போசங்கிராசன்
சாடிதள்ளினன்அலிப்புலியே சங்கிமதங்கொண்டு
கல்லுனார்னிரும்புகம்பம்போயிகனின்றாலியாரும்

ஈயங்காச்சியூற்றியகம்பம்போ லிருந்தாரலியாரும்
மரத்திலடித்தஆணியேபோல வல்லப்புலிஅலியார்
பிடிநீரப்பிடியேவிடவேயில்லே பெரியசலியலியார்
பச்சைமரத்திலாணியேபோல பிடித்தாரலியாரும்
அவனாலாணமட்டுந்தள்ளினன் ஆங்காரங்கொண்டு
பெலமெலாங்கூட்டித்தள்ளினனேயேபெரியசங்கிராஜன்
அசையுறவில்லேவிடவுமில்லே அவனேஅலிபுலியார்
அப்போதலியார்சங்கியேபார்த்து அடாபாவியேகேள்
என்னைத்தள்ளினையினிநானுன்னே யானுந்தள்ளுகிறேன்
சண்டைமுகத்திலஞ்சிடவேண்டாசமத்தைநீகாட்டு
இந்தவேளையிலுன்னிடவலுமையை என்முன்னேகாட்டு
கொஞ்சமுமஞ்சிடவேண்டாமிப்போ சங்கிராசாவே
உன்றனனுவமெல்லாங்காட்டிடு சங்கிராசாவே
என்றுசொல்லிஅலிபுலிதள்ளிட இருண்டமலேபோல
முட்டிமோதியேகீழேவிழுந்தான் முரட்டுசங்கிராசன்
நீண்டமரம்போல்கீழேவிழுந்தான் நீளசங்கிராசன்
கிடுகிடுவென்னநடுங்கிபோனன் கெட்டசங்கிராசன்
ஒடுங்கியும்போனன்கலங்கியும்போனன் உயர்ந்தசங்கிராசன்
எண்ணினஎண்ணங்கள்பாழாபோச்சுது சங்கிராசாக்கு
[illegible]காபோச்சுது சங்கிராசாக்கு
நினைத்தவேலைகள்முடியாபோச்சுது சங்கிராசாக்கு
ஊருக்குப்போகமுடியாபோச்சுது சங்கிராசாக்கு
உயிரோகில்லாமலோடிபோச்சுது சங்கிராசாக்கு
ஆனுவமெல்லாம்பறந்துபோச்சுது சங்கிராசாக்கு
அந்தவேளையில்சங்கியின்மார்மேல் அலியார்தான்குந்தி
கத்தியெடுத்துசங்கியினுடைய கழுத்தையறுக்கப்போனர்
அந்தவேளையிலசங்கிராசனும் அலியார்முகமபார்த்து
அய்யாகேளுமரசாகேளு மலியாரேகேளும
உன்றன்வலிமையைகாணாதிராமலோடியிங்குவந்தேன்
என்னுடஉயிரையிழந்திடயிங்குஓடிநானும்வந்தேன்
பாவியின்சொல்லேகேட்டுநானும பதறியிங்குவந்தேன்
பெண்டுபிள்ளேகளெல்லாம்விட்டுபோயிடநான்வந்தேன்
பணத்துக்காகஉயிரையிழந்திட பாவிநான்வந்தேன்
வந்தபின்தெரிந்தது தங்கள்வல்லமை வல்லஅலியாரே
ஏழையடியேனுமுனக்கு என்னைகாக்கவேணும்

இந்தவேளையிலென்றனுயிரை கொல்லாமல்விடவேணும்
அப்படி விட்டால்வீராகள்புலியே அதிகதருமமுண்டு
பெண்டுபிள்ளைகள்முகத்தைப்பார்ப்பேன் பின்னும் வரவேமாட்டேன்
நீங்கள்கிருபைசெய்திடவேணும் கொடியோன்வியாரே
என்றுகாணுவிதமாகெஞ்சினன் சங்கிராசாவும்
அந்தசொல்லெல்லாங்காதிலேகேட்டு அப்போதலியாற்கு
அதிகவிறக்கமுமாச்சுதவன்மேல் அண்ணலலியாற்கு
விட்டிடவேணுமென்றுநினைத்தார் வேங்கையாலிபுலி
இருந்தாப்போலொருசத்தமும்வந்தது ஏகன்புலியாரே
பொல்லாதுரோகிபோக்கிரியானவன் பேச்சைக்கேம்பாதே
வெட்டிப்போடுமென்றுதுண்டாய் விடாதேவெட்டாமல்
அந்தசத்தத்தைக்காதிலேகேட்டு அல்லாப்புலியுல்லா
வெட்டிப்போட்டனர்சங்கிராசனை வேதஅலியுல்லா
செத்துநரகுக்கிரையாய்ப்போனன் சங்கிராசாவும்
மாண்டுநரகுக்கிரையாய்ப்போனன் வல்லராசாவும்
சங்கிறந்திடக்கண்டாரவனுட சேனைத்திரளெல்லாமன்
சொல்லாமலெல்லாமோடிப்போயின தம்பிரின்குடம்போல
சிதறிச்சிதறிஓடினாரெல்லாம் சேனைப்படையோர்கள்
மகளிபட்டணம்போனாரெல்லாம் ஆயசீரில்லாமல்
அப்போதலியுங்கம்பருந்துல்துலும் அல்லாவருளாலே
வெற்றிபெற்றுவந்தனர்திரும்பி வரிசைமக்காகக்

(நபிக்குஇராசனுக்குச்சேதிசொல்லுதல்.)

அலிபுலிவருவதைக்கண்ணுற்கண்டு அகம்மதுநபியுல்லா
உமன்றுபாராகளும்அசுகாப்மார்களு மொய்த்துத்திரளாக
எதிர்கொண்டார்கள்அலியாருக்கு இன்பமிகபெருக
அப்போதலியார்நபியுல்லாவின் அடிமலர்பதம்போற்றி
எல்லோருஞ்சேர்ந்துபள்ளிக்குப்போயினர் பெரியகடல்போல
கடந்தசங்கதியெல்லாஞ்சொன்னார் நபிக்கு அலியாரும்
சங்கதியெல்லாங்கேட்டெல்லோரும் சந்தோஷமானார்கள்
அந்தவேளையில்மெக்கட்புறமாபொழுதும்போயடைந்து
நபியுல்லாவுமவர்களசாபுமாம் நாயன்றனைத்தொழுது
அவரவர்வீடுகளெல்லாம்போனார் அச்சங்களில்லாமல்
நபியுல்லாவும்தங்கள்வீட்டுக்குப்போனார்நில்வொளிபோல்

உண்டுகுடித்துசந்தோஷமாக உறக்கிறாரெல்லாம்
உலகினிலுள்ளபடைப்புகளெல்லா முறக்கமாகிப்போச்சு
சேவல்கள்கூவிகிழக்கும்வெளுத்தது சுபகுநோமாச்சு
சொன்னார்பாங்குமிலாலுமப்போ தொழுகிடவாங்கவென்று
வாங்குசத்தத்தைகாதிலேகேட்டு வந்தார்பள்ளிக்கு
சுபகுதொழுகையைதொழுதெல்லோரும் சுகமாயிருந்தார்கள்
சங்கியின்கூடவந்தவரெல்லாம் திசைதிசையாய்ச்சிதறி
எல்லாமொன்றாய்ச்சேர்ந்துக்கூடினர் ஏகக்கூட்டமதாய்
மகரிபுபட்டணம்போறாரெல்லா மனதுமிகவாடி
சஞ்சலம்பெரிதாய்ப்போனாரெல்லாம் சங்கிதனையிழந்து
சஞ்சலத்தோடுகோட்டைக்குள்வந்தார் சங்கிப்படையோர்கள்
மாடகூடங்களெல்லாந்தாண்டினர் வாடியமுகமாக
கொலுமுன்னாகப்போனாரெல்லாம் கூட்டமாகக்கூடி
மலுக்குராசன்பாதம்பணிந்து நின்றாரெல்லாரும்
வாடியமுகமாயெதிரினில்நிற்க மலுக்குராசன்கண்டு
அரியேவெட்டிடபோனபேர்களே ஆனவமுள்ளோரே
என்னவிதத்தாலிப்படிவந்தீ ரெல்லாருங்கூடி
வந்தகாரணஞ்சொல்லுங்களென்றான் மலுக்குராசாவும்
போனகாரியஞ்சொல்லுங்களென்றான் பெரியராசாவும்
திரும்பிவந்ததைசொல்லுங்களென்றான் குராசாவும்
என்னகாரணமேதுகாரண மெனக்குசொல்லென்றான்
அந்தச்சொல்லைகாதிலேகேட்டு சங்கிப்படையோர்கள்
பாதம்பணிந்துதெண்டமுஞ்செய்து பயந்துமிகநெங்கி
இராசாக்கெல்லாமிராசனாகிய ராசாவேகேளும்
சங்கிராசன்கூடவேபோனோம் சற்றுமஞ்சாமல்
மக்கமாநகரம்காதமிருக்கையில் வழியிலிறங்கிருந்தோம்
மக்கத்தார்களொட்டகமெல்லாம் வந்ததுமேய்ந்திடவே
அந்தஒட்டகமெல்லாம்பிடித்து சங்கிராசாவும்
பொழுதுக்குக்காட்டிவிழுங்கிப்போட்டான் சங்கிராசாவும்
பட்சியேமேயவிட்டானங்கே சங்கிராசாவும்
அய்யாவேநீயினிமேல்கேளு மாகும்வேலைகளை
ஒத்தைதக்குதிரைக்காரனும்வந்தா னொருள்தனைக்கூட்டி
பஞ்சைபோலவந்தானய்யா பாவிபஞ்சையவன்
சண்டைக்குவந்தவீரனுமல்ல சதிமானக்காரன்
பட்டைசாரிகள்போலவேவந்தான் பார்ப்போர்தங்களுக்கு

குதிரைவருவதைக்கண்டான்சங்கிக் கொடியராசாவும்
பட்சியேபார்த்துசொன்னானப்போது பாரசங்கிராசன்
குதிரையைகொத்திவிழுகவிடுமென்றான் கொடியசங்கிராசன்
கொத்திவிழுகிடபோனதுபட்சி குதிரையின்தன்கிட்டே
அந்தவேளையிலென்றுசெயத்தானந்தகுதிரைக்காரன்
கத்தியையுருவிபட்சியைவெட்டினான் கனத்தவிடிபோல
அந்தவெட்டினால்ரெண்டாய்ப்போச்சது அந்தபட்சியது
பட்சியிறந்திடக்கண்டான்சங்கிப் பாராசாக்கு
கண்களிரண்டும்சிவந்துபோச்சுது கடுங்கோபங்கொண்டு
தண்டத்தாலேஅடித்தானய்யா தண்ட முறிந்துபோச்சு
கத்தியினாலேவெட்டினானப்போ கத்தியொடிந்துபோச்சு
அந்தவேளையில் அலியார்சீறி ஆங்காரங்கொண்டு
ஆட்டைத்தூக்கிப்போடும்வாறுபவனைத்தான் தூக்கி
கீழேபோட்டுக்கழுத்தையறுத்தார் கொற்றஅலியாரும்
செத்துமாண்டுபோனானய்யா சங்கிராசாவும்
நாங்கள்பயந்துவந்தோமையா ராசாமாமலுக்கே
வாயால்சொன்னால்தெரியாதையா ராசாமாமலுக்கே
கிட்டேபோனால்தெரியுமையா ராசாமாமலுக்கே
பார்த்தாலப்போதெரியுமையா ராசாமாமலுக்கே
சொல்லிடவல்லமையெங்களுக்கில்லை ராசாமாமலுக்கே

(மலுக்குராசன் கோவித்துச்சொல்லுதல்.)

இந்தசேதிகளெல்லாங்கேட்டுராசாமாமலுக்கு
நெறநெறவென்றுபல்லைகடித்து ராசாமலுக்கு
உருட்டிமிரட்டிபார்த்தானப்போ ராசாமாமலுக்கு
அந்தவேளையிலென்னசொல்கிறான் மலுக்குராசாவும்
முன்னால்போனபூதத்தைக்கொன்றான் முரட்டுஅலியென்போன்
பின்னால்போனசங்கியைவெட்டினான் பெரியஅலியென்போன்
ஆனாலாகட்டுமாகட்டும்வலுமையை யறிவேன்நான்போய்
என்னுடையாளுக்குஇரையாய்க்கொடுப்பேன் அலியின்தன்னுயிரே
விட்டுவிடுவேனோலேசாஅலியோ வெட்டிடுவேன்தலையே
இத்தனைஆணவமாச்சுதா அலிக்கு என்னைக்கெலிப்பானோ
ஆணவமெல்லாமடக்கிவைக்கிறேன் ஆகட்டுமாகட்டுமையார்
இப்படிமலுக்குராசன்சொல்லிட இருந்தபடைவீரர்
எங்களையாளும்ராசனேகேளும் எங்கள்சொல்லையென்றார்
அந்தவேளையில்சின்னசிப்படையோர் ஆங்காரமிட்டெழுந்து
அலியைவென்றிடப்போறோமென்றார் மலுக்குராசாவே
அதன்பின்பூதப்படையோரெழுந்து அய்யாராசாவே
பொல்லாஅலியைவெட்டிக்கெலித்திடப் போறோம்நாங்களென்றார்
பின்புசங்கிப்படையோரெழுந்து பெரியராசாவே
நாங்கள்போரோமலியைகெலித்திட நல்லசண்டைசெய்ய
அருக்கிப்படையும்நரிப்படையும் சொன்னாரதுபோல
அந்தசொல்களைக்காதிலேகேட்டு அப்போமாமலுக்கு
சந்தோஷமானான்மென்மேலாக தனியமகிழ்வாக

௰

நால்வகைப்படையோர்தங்களைப்பார்த்து ராசாமாமலுக்கு
நான்மரிசொல்கிறேன்கேளுங்களென்றான் ராசாமாமலுக்கு
முன்னால்போனபூதப்படைகளு முழுதுமாண்டுபோனார்
பின்னால்போனசங்கிராசனும் பேசாமல்மாண்டான்
அந்தப்பழிகளைவாங்குவோர்நீங்கள் அச்சங்களில்லாமல்
அபியார்முகம்மதுகப்பனைவெட்டி அறுத்துவாங்கள்தலையே
கோட்டைபிடித்துப்போடுங்கள் தூசியாய்பறக்கச்செய்திடுங்கள்
பெண்டுபிள்ளைகளைச்சிறையாய்ச்சேர்த்துப்பிடித்துக்கொண்டுவாருங்கள்
அப்படிசெய்துவருவீராகில் அதியதியாகத்தருவேன்
கேட்டகேட்டபடியேவெகுமதி கொள்ளும்படிகொடுப்பேன்
இந்தச்சணமேசண்டைக்குப்போங்க ளென்றான்ராசாவும்

(நால்வகைப்படைமக்கம்போகுதல்.)

அந்தசொல்லைக்காதிலேகேட்டு நால்வகைப்படையோர்கள்
ஈட்டிகளெடுத்துக்கையிற்பிடித்தா ரெத்தனையோவீரர்
கத்திகளெடுத்துக்கையில்பிடித்தார் கணக்கில்லாவீரர்
தண்டாயுதத்தைக்கையிலெடுத்தா ரெத்தனையோவீரர்
சக்கரமெடுத்துக்கையிற்பிடித்தா ரெத்தனையோவீரர்
அம்புகளெடுத்துக்கையிற்பிடித்தா ரெத்தனையோவீரர்
கவண்களெடுத்துக்கையிற்பிடித்தா ரெத்தனையோவீரர்
சுருட்டுகத்திகள்கையிலெடுத்தா ரெத்தனையோவீரர்
ஆயுதமெல்லாம்பூட்டினாரன்று அளவில்லாப்படையோர்
இராசனிடத்துக்குவந்தனரெல்லாம் ராசாதிராசே
சண்டைக்குப்போகவெங்களுக்கெல்லாம் தாரும்விடையென்றார்
அந்தவார்த்தையேக்காதிலேகேட்டு ராசாமாமலுக்கு
சீக்கிரமாகப்போங்களெல்லாம் சண்டைக்குளென்றானும்
சண்டைசெய்துகெலித்திவிவாங்கள் சிப்பாய்மார்களென்றான்
அந்தவார்த்தைதனைக்காதிலேகேட்டு நால்வகைப்படையோர்கள்
சந்தோஷமாகப்புறப்பட்டார்கள் சண்டைசெய்யவென்று
பட்டணம்விட்டுவெளியேவந்தார் பெரியகடல்போல
விடுதிவிடுதியாய்நடந்ததுபாளயம் வெள்ளக்கடல்போல
அணிஅணியாகநடந்ததுசேனைகள் அலையாலிகடல்போல
படபடவென்னநடந்ததுதிரளாய்ப் படையின்பெருங்கூட்டம்
தடதடவென்னநடந்ததுதிரளாய் தானையின்பெருங்கூட்டம்
குமுகுமுகுமுவென்னநகமுகம்வாத்தியம் குமுறுதுபேரொலியாய்
வகைவகையானமேளசங்கீத முழங்குதுநகமுகமும்
சிச்சிரிதிண்டிமம்தாளாகளோசைகள் தானேமுழக்கமிட
பேரிகைபூரிமல்லரியெக்காளம் பேரொலியாயொலிக்க
தூசிகளெழுந்துபொழுதைமறைத்திட நடந்ததுசேனைவெள்ளம்
ஆறுமலைகளெல்லாந்தாண்டி நடந்தார்மக்கநகர்
காதமிருக்கத்தங்கோரிடத்தி லிறங்கினார்கடல்போல
நகமுகமெங்குங்கூடாரமடித்தார் நால்வகைப்படையோர்
விதவிதமாகக்கூடாரமடித்தார் நால்வகைப்படையோர்கள்
பெரியமலைபோலெங்குந்தெரிந்திட படங்குகளடித்தார்கள்

39

அணியணியாகக்கடை வீதிகளு மலங்காரஞ்செய்தார்கள்
ஆட்டமும்பாட்டமுஞ்செய்தாரெல்லா மானுவமிகப்பேசி
வானின்முழக்கம்போல்முழங்கினவெங்கும் பேரிகைவாத்தியங்கள்
நாலுதிசைகளுமொரோசத்தமா நகரா அடித்தார்கள்
மக்கமாநகரங்கேட்ட அசத்தம் வானிடிபோல
அந்தசத்தத்தைக்கேட்டுமெய் மசகாப்புமாருமாய்
எப்போதுமில்லாசத்தமிதேது எங்கேமுழங்குதுபார்
ஒரேமுழக்கமாமுழங்குதுசத்தம எந்நேரமேயாமல்
எந்ததிசையினிலிருந்துவருகுது இந்தசத்தமது
பார்த்திடவேண்டுமென்றெலாங்கூடி பகர்ந்தாரந்நேரம்
அஞ்சுவேளையும்பாங்குசொல்லும் பிலாலவரைக்கூவி
மினாறாவின்மேலேறிநீர்பாரு முழங்குமிந்தவொலி
எந்ததிசையிலிருந்துவருகுதி என்றுவுற்றுப்பாரும்
என்றசொல்லைக்காதிலேகேட்டு எழுந்துபிலால்ப்போ
ஏறியபார்த்தார்நாலுதிசைகளும் ஒருதிசைமுகமாக
பெரியகடல்போலிறங்கியிருக்கிறார் படைத்திரள்பெரிதாக
மலைகள்போலேகூடாரமடித்து மகாசேனையாக
படையின்கூட்டத்தைக்கண்ணுற்கண்டு பிலாலுமந்நேரம்
கால்கைநடுங்கிடகீழேயிறங்கினார் கனத்தபிலாலவரும
நபிகளுக்கெல்லாம்பாதுஷாவாகிய நபியேநீர்கேளும்
கண்டதைசொல்லிடமுடியாதென்னால் கோர்ணக்கண்மணியே
மக்கமடுத்தாப்போலொருகாத வழியிற்குள்ளாக
பெரியகடல்போல்சேனைகள்வந்து கூடாரந்தானடித்து
இறங்கியிருக்கிறாரென்றுசொல்லே னிறசூலகதிறுசே
என்னகாரியமாவந்தார்களோ எந்தஊராரோ
சண்டைக்குவந்தபேர்களாயிருந்தால் சருதாரென்நபியேகேள்
ஒருவராலுமாகாதெதிர்க்க உள்ளபெரும்படையாம்
கட்டிலடங்காப்படையாயிருக்குது கடல்போல்தானென்றார்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு அப்போநபியுல்லா
இந்தப்படைகளைவிடமிருந்து வந்தபடையிதுவோ
ஒன்றுந்தெரிந்திடவில்லையென்றார் உடையோனபியுல்லா
அந்தவார்த்தையைக்காதிலேகேட்டு அலிப்புலியெழுந்து
ஆசைமிகுத்துஎறிபின்வந்த அகமதுநபியேகேள்
மலைபோலுயர்ந்தமுந்நூறுமுழத்தான் மலுக்குமுலுக்குராஜாவும்
நம்முடபேரிலனுப்பினானிப்படை நபிகள்நாயகமே
ஜின்னின்படைகளும்பூதப்படைகளும் திரண்டொருகடல்போல
துருக்கிப்படையும்றூமிப்படையும் சேர்ந்தொருகடல்போல
கூடிவந்தனர்நால்வகைப்படையும் கொடியசண்டைசெய்ய
என்றசொல்லைக்காதிலேகேட்டு இறசூல்நபியுல்லா
நால்வகைப்படைகளைவெல்லவதுஅரிது நாயனலியாரே
பெரியகூட்டமாகூடிவந்தார் பெரியோனலியாரே
என்றசொல்லைக்காதிலேகேட்டு ஏகனலியாரும்
நபிகளுக்கெல்லாம்நபியாய்வந்த நவமணிகண்மணியே

காட்டினிலாறுவோடிடச்செய்த காரணமென்னபியே
நாகப்பாம்பைவழியினில்வதைத்த நபியேநாயகமே
சொல்லிடக்கேளுமென்றன் வார்த்தையை ஆதாரமாய்வந்தவரே
அல்லாதுணையுந்தங்கள் துவாவின் வரிசையுமுண்டாகில்
எழுகடல்போல்படைகள்வந்தாலு மெனக்கொருபாரமல்ல
மலைபோலுயர்ந்தபெரும்படை கூடி வந்தாலுமஞ்சேன்
அவர்களுயிரைவானம்போயிட அனுப்பிவைத்திடுவேன்
பொடிபொடியாகவுடல்களைவெட்டி போக்கிடுவேனாகம்
நீலைகள்சிதறிட மண்டைகளெல்லாமுடைந்திட மாட்டிடுவேன் சண்டை
ஒன்றுக்குமஞ்சேனல்லாவுதவியால் உடையோனென்னபியே
ஒருநொடிக்குள்ளேசெய்வேன் ஆனென உடையோனென்னபியே
அந்தப்படைமேலென்னையனுப்பிடும் அல்லாதிருத்தூதே
வந்தபடைமேலென்னையனுப்பிடும் வல்லோன்திருத்தூதே
சண்டைக்குப்போயிநான்கெலித்துவருகிறேன் சருதாரணவரே
என்றசொல்லைச்காதிலேகேட்டு இறசூல்நபியல்லா
அல்லாவுமக்குவெற்றியும்பலமும் தருவானலியாரே
ஆனாலாகட்டுஞ்சண்டைக்குப்போவீர் அஞ்சாமல்நீயும்
உங்கள்வீட்டுக்குப்போய்நீர்வாரும் உடையோனலியாரே
என்றசொல்லைக்காதிலேகேட்டெழுந்து அலியாரும்
பாத்திமாநாயகம்வீட்டுக்குப்போனார் பாரஅலியல்லா
என்னகாரணம்வந்திஞ்செய்தியே யென்னுடன்சொல்லென்றார்
அடியாள்தனக்குவந்தசெய்தியே அரசரேநீர்சொல்லும்
நினைத்தவையெல்லாமடியாளுக்கினை நீதரேநீர்சொல்லும்
என்றசொல்லைக்காதிலேகேட்டு ஏகனலியாரும்
நபியின்மகளேநாயகவிளக்கே காரணசொல்லக்கேளும்
இன்றுநால்வகைசேனைகள்வந்து இருக்குதுபெரிதாக
அந்தசண்டைக்குப்போகிடவேணும் அகம்மதுநபிமகளே
கொடியசண்டைக்குப்போகிடவேணும் கொற்றநபிமகளே
படைகளைவெட்டிக்கெலித்திடவேணும் பயகாம்பர்தன்மகளே
என்றுஅலியார்சொல்லிடகேட்டார் இறசூல்நபிமகளார்
என்னசொன்னீரெந்தன்பாவா என்றன்கணவனே
அந்தப்படியேகேட்டிடுமென்றார் பாத்திமாநாயகியும்
அந்தசொல்லைக்காதிலேகேட்டு ஆதிப்புலிபலியார்

(அலிறலியல்லாகு நால்வகைப்படைபோகுதல்.)

சந்தோஷமானாந்தவேளையில் சண்டைக்குத்தான்போக
உடனேதுல்துல்குதிரைக்கு உறமாசீனிவைத்துகட்டி
சிங்காரமாகநாலுகாலுக்கும் தண்டையதுபோட்டார்
வானின்பரியேசிங்காரித்தார் வல்லஅலியாரும்
மேகப்பரியேசிங்காரித்தார்வெற்றியலியாரும்
அந்தவேளையிலென்னசெய்தாராதிப்புலியல்லா
ஏழுலோகத்தையொன்றாய்வெட்டிடு மிலங்குஞ்சுல்பக்கார்
கட்டிலிலுள்ளயலைகளைப்பிளந்திடும் நல்லசுல்பக்கார்
ஒரேவீச்சுக்குஇரண்டாய்ப்பிளந்திடு மொளியின்சுல்பக்கார்

(அந்த) கத்தியையெடுத்துக்கையில்பிடித்து கத்தாபுலியையார்
துல்துல்குதிரைமேலேறினாப்போ தூயஅலிப்புலியார்
வானின்பரிமேலேறினாப்போ வல்லப்புலியையார்
மேகப்பரிமேலேறினாப்போ வெங்கப்புலியையார்
குதிரைதுல்துலெண்ணினதப்போ கொற்றபுலியையார்
வான்மேல்விட்டாலொருநொடிக்குள்ளே பறந்துவந்திடுவேன்
மலைமேல்விட்டால்மலைகள்தூளெழ காலால்மிதித்திடுவேன்
படைமேல்விட்டால்காலால்மிதித்து பாழுபடுத்திடுவேன்
இராசர்முடிகளேசெண்டுபோல்காலால் சிதறமிதித்திடுவேன்
கன்னகன்மூளைகள்பிதுங்கிடகாலால் கசக்கிமிதித்திடுவேன்
இப்படிநாலுவிதமா துல்துல் எண்ணிநடந்ததுவே.
அலியார்கையில்பிடித்திடுங்கத்தி அந்தப்படையேபார்த்து
வர்யினைகழுவிடபோதாபடைகள் வந்ததுநம்முன்னம்
தின்னநமக்குவுணவுமில்லையே நீவுளசேனையிது
இப்படி அலியார்கல்பக்காரும் சொல்லிட அவ்வேளை
கல்பர்சொல்லின்றிப்படையெல்லாம் நமக்குப்போதாது
இப்படிதுல்துலும்வாளும்கம்பரும் வல்லமைத்தான்பேச
துரங்கந்துல்துல்தன்னைநடத்தினர் தூயஅலியுல்லி
வானமநடுங்கின பூமிநடுங்கின வகைவகையாயுள்ள
மலைகளெல்லாம்நடுங்கின தன்றுமரமும்புலுமெல்லாம்
செந்தூளெழும்பிபோச்சுதுவப்போ திசைகள்தெரியாமல்
கருந்தூளெழுந்துபோச்சுதுவப்போ கதிரோன்தெரியாமல்
காற்றின்வேகமாபறந்துவருகுது கடுக்கதுல்துலது
மேகம்போலபறந்துவருகுது வேகதுல்துலது
ஜீழமேல்தெரியாப்பறந்துவருகுது குதிரை துல்துலது
கிட்டேகிட்டேதுல்துல்வரவுங் கண்டார் நல்வகையார்
அந்தவேளையில்சங்கிலிகூட யிருந்தபடையோர்கள்
அலியார்வரவைக்கண்டிடவப்போ அங்கங்கிடுகலங்கி
நால்வகைபடையாய்வந்தபேர்களே நாங்கள்சொற்கேளும்
அதோகுதிரைமேல்வருகின்றானே அவன்றான் அலியாராம்
பூதம்சங்கிலியேவெட்டியவல்லமை புலியலியிவர்தான்காண்
அந்தசொல்லைகாதிலேகேட்டு நால்வகைப்படையோர்கள்
ஏழுகடலுங்கலக்கினதுபோல எழுந்தாரெல்லாரும்
சீக்கிரமாகதயாராயிருங்கள் சிபாயிமாருகளே
சல்திசல்திதயாராயிருங்கள் சேவகமாருகளே
கம்முடன்திரீஅதோவருகிறான் நால்வகைப்படையாளே
என்றசொல்லைகாதிலேகேட்டு எல்லாவீரர்களும
தயாராகினாராயுதம்பூட்டி சண்டைக்கிப்படையெல்லாம்
கல்கலவென்றுநால்வகைப்படைகள் கலக்கமாகிப்போச்சு
கடலதுகலங்கிடும்வாறதுபோல கலந்தாரெல்லாரும்
அதோவருகிறநால்மூழப்பயலை அடையவளைத்துக்கொள்ளும்
அம்புகளெடுத்துபோடுங்களவன்மேல் அண்டந்தெரியாமல்
கிட்டேவந்தாலீட்டியால்குத்துங்கள் குடல்கள்சரிந்துவிழ

தலைமூளைகள்சிதறிவிழுந்திட தண்டத்தாலடிங்கள்
என்றவார்த்தைதயைக்காதிலேகேட்டாரேகன்புலி அலியார்
அந்தவேளையிலென்னசெய்தார்திப்புலியலியார்
குதிரைக்கிசிமிட்டாகொடுத்தாப்போ கொறற அலியுல்லா
திடுதிடுதிடுவெனபூமியதிர்ந்திட கேசரியுல்லா
கொக்குக்குலத்தினில்ராசாளியேபோல புகுந்தாலியுல்லா
ஆட்டுக்குலத்தினில்புலிபுகுந்தாப்போல் ஆங்கார அலியுல்லா
சின்னின படையுள்சீறிபுகுந்தார் சூர அலியுலலா
அந்தவேளையில்அலியாருக்கு மூண்டது பெருங்கோபம்
வாளையுருவிக்கையிலேபிடித்து வல்ல அலியுல்லா
வெள்ளரிக்காயேபிளப்பதுபோல பிளந்தாலியுல்லா
கத்திரிக்காயே அறுப்பதுபோல அறுத்தாலியுல்லா
மண்ணும்விண்ணும்தெரியாபோச்சுது. அந்தவேளையிலே
போடுபோடெனபோட்டாரப்போ பெரிய அலியுல்லா
மாட்டுமாட்டெனமாட்டினாரப்போ வல்ல அலியுல்லா
அந்தவேளையிலென்னசெய்தார் நால்வகைப்படைபோர்கள்
ஒருபுறமசின்னின்படைகள்வளைந்தாருடையோனலியாரே
ஒருபுறம்ரூமிபபடைகளவளைந்தாருற்ற அலியாரே
ஒருபுறம்துருக்கிப்படைகள்வளைத்தார் உயர்புகழலியாரே
ஒருபுறம்சங்கிப்படைகள்வளைத்தாருடையோனலியாரே
நாலுபுறமும்வளைந்[illegible]ண்டார் நாயகாலியாரே
மேகம்போலகவிந்தாரெல்லாம் வேந்தஅலியார்மேல்
அந்தவேளையிலென்னசெய்கிறார்திபுலியலியார்.
கம்பரைப்பார்த்துக்குதிரையின்வாலைபிடித்துக்கிநின்னொன்றார்(ஆஆடி
விட்டாரப்போ அலியார்கத்தியே முன்பின்றெரியாமல், கொடுத்தார்
குதிரைச்சிசிமுட்டா அலியார்கோபமிகவாகி, அந்தவேளையில் துல்துல்கு
திரை ஆடிவருகுதுபார்காகர்வென்றுசுழலுது துல்துல் கடுநடைதாள
மேகம்போலேபறந்துபாயுது வேகதுல்துல்து, காற்றைப்போலபறச
துபடையுள்கலந்ததுல்துலது, மேகம்போலமூடிக்கொண்டது தாசி
வ்வேளை, ஓராயிருளாயிருண்டுக்கொண்டது எங்குந்தெரியாமல், மினு
னுமினுவெனமின்னுதுகத்தி மின்னலொளிபோல, தகதகதகவென
ன்னுதுகத்தி சந்திரனொளிபோல, வெட்டுக்குவெட்டுக்குக்குப்பல்குப்ப
லா விழுந்ததுகுதிரைகளும், கால்வேறாகத்தலைவேறாக விழுகுதுகுதிரை
களும், மூளைகள்தயிரின்குடம்போல்சிதறி விழுகுதுகுதிரைகளும், வீச்சு
க்குவீச்சுவிழுகுதுசின்கள்வெள்ளக்கடல்போல, ஒருபுறம்சங்கிமார்க
மடிந்தார் கூகூகூவென்று ஒருபுறம்ரூமிப்படைகள்மடிந்தார் உற்றக
ல்போல, ஓடுதுரத்தமாறாய்ப்பெருகி ஒரேவெள்ளமாக, கட்டுமரங்க
போலபிணங்கள் மிதக்குதுகழுகும், மலைகள்போலசின்னின்படை
ள் மடிந்துமாண்டுபோனார், என்னசொல்வேனே நுசொல்வேனன்று நட
டந்தசண்டை, இப்படிநானாவிதமாய்ச்சண்டை அலியார்தான்செய்து மீந்த
குபோர்களையிசுலாமாக்கிவிட்டு அலியாரும், மக்கநகர்க்குவந்தாரவியும்முக
ம்மதுநபிமுன்பில், நடந்தசங்கதியெல்லாஞ்சொல்லினார்நல்ல அலியாரும்
ஆமீன் ஆமீன். மலுக்குமுலுக்குராஜன்கதை - முற்றிற்று.

---